


மலர் 7 | ஹிஜ்ரீ 1365ஹு ரமலான் மீ | இதழ் 10
கி. பி. 1946ஹு ஆகஸ்டு மீ

| நெ. | விஷய அட்டவணை | | பக்கம். |
|---|---|---|---|
| 1 | குர்ஆன் | ... | 503 |
| 2 | களங்க மேகம் | ... | 505 |
| 3 | நாடும் நகரமும் | ... | 507 |
| 4 | சென்னையில் "நேரடிச் செயல் தினம்" | ... | 509 |
| 5 | தூய்ய இஸ்லாத்தின் திருந்த பாதை | ... | 511 |
| 6 | சன் பகவல்லி தேவி | ... | 513 |
| 7 | சிந்தித்துப் பார்! சோதரா? | ... | 516 |
| 8 | தேசிய முஸ்லிம்களுக்கு ஒரு வார்த்தை | ... | 517 |
| 9 | சமூகத்துடன் மோதாதே! | ... | 519 |
| 10 | "ஏழையின் துயரம்" | ... | 521 |
| 11 | "விதியிலும் பாழும் விதி" | ... | 524 |
| 12 | ஐ. பி. ஸ. அல்லது ஆகாகான் கொள்கை | ... | 527 |
| 13 | துரோகம் செய்யாதே! 531 \| மதிப்புரை | ... | 532 |
| 14 | இஸ்லாத்தின் ஆரம்ப போதனைகள் | ... | 535 |
| 15 | குலபாயெ ராஷிதீன் | ... | 537 |
| 16 | கவியரசர்...539 \| த. உ. மு. வாலிபர்களும் | ... | 540 |
| 17 | தெ. இ. தென்படும் தெவிட்டாத ஆனந்தம் | ... | 543 |
| 18 | உத்தேசமான ஹஜ் பிரயாணச் செலவு | ... | 545 |
| 19 | ஓடும் ரயிலில் | ... | 547 |
| 20 | "நபிபெருமானின் வீர மொழி" | ... | 550 |

"நூருல் இஸ்லாம் ஆபீஸ்",
P. Box, No. 201.
65, பிராட்வே, ஜார்ஜ் டவுன், மதராஸ்.












بسم الله الرحمن الرحيم
نحمده و نصلي على رسوله الكريم




# நூருல் இஸ்லாம்

(ஓர் உயரிய பிரபல தமிழ் மாசிகை)

# NOOR-UL-ISLAM

(AN EXCELLENT TAMIL MONTHLY)

ஆசிரியர்: A.N. ஹாபிஸ் முஹம்மது யூசுப் (பாஜில் பாகவி)

| | | |
|---|---|---|
| மலர்- 7 | ஹிஜ்ரீ 1365ஹு ரமலான்மீ<br>கி. பி. 1946ஹு ஆகஸ்டுமீ | இ -10 |


## குர்ஆன்

"(ஏ நபியே) சொல்வீராக! (இடம் சம்பந்தப் பட்டவரையில், வானங்களில் உண்டானதும் பூமியில் உண்டானதும் யாருக்குரியது. (என்பதை நன்கு நிதானமாய் கவனித்துப் பார்ப்பீர்களாக. அன்றியும் நபியே) சொல்வீராக: (அவற்றின் அதிகாரங்களெல்லாம்) ஆண்டவனுக்குரியதே. ஆண்டவன் அருள் பாலிப்பதையே தன்மீது கடமையாக்கிக் கொண்டிருக்கிறான். கியாமத் (இறுதி) நாளில் உங்களையெல்லாம் நிச்சயமாய் ஒன்று சேர்ப்பான். இதில் சந்தேகமென்பதே இல்லை. தங்களது ஆன்மாக்களை நஷ்டவாளிகளாய்ச் செய்து கொண்ட அவர்கள் (ஆண்டவன்மீது) நன்னம்பிக்கை கொள்ளமாட்டார்கள்."

(அன்ஆம் 6: 12.)

"மேலும் (காலம் சம்பந்தப்பட்டவரையில் இரவிலும், பகலிலும் சாந்தமாய் வாழ்ந்திருப்பவைகளெல்லாம்) (கூட) அவனுக்குச் சொந்தமானவைகளாகவே யிருக்கின்றன. எனவே அவன் (சர்வ விஷயங்களையும்) கேட்பவனாக, அறிகிறவனாக யிருக்கின்றான்.

(அன்ஆம் 6: 13)

"(மீண்டும் ஏ நபியே) சொல்வீராக! வானங்களையும், பூமியையும் படைத்திருப்பவனை, அவனை விட்டு விட்டு வேறு எஜமானனை நான் பற்றிக்கொள்ள வேண்டுமா (இது முடியாத காரியம்) அவன் (நமக்கெல்லாம்) உணவளிக்கின்றான். அவன் உணவளிக்கப்படுவதில்லை. (மேலும் நபியே) சொல்வீராக: வழிபட்டு நடப்பவர்களுள், முதன்மையாய் நான் இருக்கவேண்டுமென கட்டளையிடப் பட்டுள்ளேன். மேலும், நீர் இணை வைத்து நடப்பவர்களுள், ஒரு போதும், ஆகாமலிருப்பாராக.

(அன்ஆம் 6: 14)

"(இன்னும் நபியே) சொல்வீராக! நான் எனது ரக்ஷகனுக்கு மாறு செய்வேனாகில்,

வலுப்பமான (பெரிய) நாளின் வேதனையைக் குறித்து, (அதிகம்) அஞ்சுகிறேன்.

(அன்ஆம் 6: 15)

"எவருக்கேனும் அத்தண்டனையை இன்று (இவ்வுலகத்தில்) திரும்பப்பட்டு விடுமாயின், நிச்சயமாகவே அவர் பால் (ஆண்டவன்) கழிவிரக்கம் கொண்டான். எனவே இது (சர்வ சாதாரணமான விஷயமல்ல.) பகிரங்கமான மாபெரும் வெற்றியாகும். (அதாவது இறுதி கால தண்டனை ஒரு பக்கம் கிடக்க இவ்வுலகத்திலேயே, இப்பொழுதே ஒருவன் ஆண்டவனுடைய தண்டனையினின்றும் கஷ்டத்தினின்றும், ஈடுபட்டு விடுவானாகில் இது உண்மையால் மாபெரும் வெற்றியே யாகும்.)

(அன்ஆம் 6: 16.)

"மேலும், ஆண்டவன் ஏதேனும் ஒரு இடையூறுகொண்டு, உம்மை தீண்டுவானாகில், அவனன்றி அவ்விடையூறை அகற்றுபவர் யாருமே யில்லை. மேலும், (இப்படியே) உம்மை ஒரு நன்மையைக் கொண்டு தீண்டுவானாயின், (அதைத் தடுப்பவரும் யாருமில்லை.) "எனவே அவன் சர்வ வஸ்துக்களின் மீதும், சக்தியுடையவனாக யிருக்கிறான். (எனவே) அவன் செய்யும் எதையும் எவனும் மாற்றவோ, திருத்தவோ, சரி யென்றும், தவறென்றும் சொல்லவோ முடியாது.)"

(அன்ஆம் 6·17)

"மேலும், அவன் தன் அடியின்மீது (சர்வ அம்சத்திலும்) மிகைத்தவனாயிருக்கிறான். எனவே அவன் ஞானம் நிறைந்தவனாக யிருக்கிறான். (ஆகவே தன்னறிவுள்ளவனாக யிருக்கிறான். (ஆகவே அவன் செய்யும் எதையும், எவரும், சர்வ சாமான்யமாய் தடை பண்ணவோ, தவறு என்று கூறவோ தாமென தெரிந்து கொள்ள வேண்டும்.)" (அன்ஆம் 6·18)

"(ஏ நபியே சொல்வீராக! சாக்ஷியங்களுள் மிகப் பெரியவஸ்து எது? எனக்கும், உங்களுக்குமிடையே அல்லா சாக்ஷியாயிருக்கிறான் என்று கூறுவீராக. என்பால் இந்த குர்ஆன், தேவ வெளிப்பாடாய் அளிக்கப்பட்டிருக்கிறது. ஏனெனில் அதைக் கொண்டு உங்களுக்கும், யாருக்கும் அது கிடைத்ததோ அவருக்கும் நான் அச்சமூட்டி எச்சரிக்கை செய்வதற்காக அல்லாவுடன் வேறு வணக்கத்துக்குரியவர்களும் உண்டு என்று நீங்கள் சாக்ஷியம் கூறுகிறீர்களா? (அப்படியே) நீவிர் கூறினும் கூறிக் கொள்ளுங்கள். ஆனால் ஏ நபியே நான் (இங்ஙனம்) சாக்ஷியம் பகரமாட்டேன் என கூறுவீராக. (அன்றியும்) ஆண்டவனாக இருக்கக் கூடிய அவன் வணக்கத்துக் குரியான் ஒருவனே. மேலும் நீங்கள் இணைவைத்து வணங்கி, வருவதை விட்டும், நான் நீங்கியவனாயிருக்கிறேன் என்றும் (அவர்களைப் பார்த்து சொல்லிவிடுவீராக.)"

(அன்-ஆம் 6-19.)

வேதத்தை நாம் அவர்களுக்களித்தவர்கள். அவரை (நபியை) தங்கள் பிள்ளைகளை அறிந்து கொண்டிருப்பதுபோல் அறிந்தவர்களாகவே யிருக்கின்றனர். (முந்தின வேதங்களிலெல்லாம் இந்நபி வருவாரென்று முன்னெச்சரிக்கையாய் நாம் எடுத்துச் சொல்லியிருக்கிறோம். இதை அவர்கள் நன்கு உணர்ந்தவர்களாகவே யிருக்கின்றனர். தெரிந்திருந்தும் ஒப்புக்கொள்ள மறுக்கின்றனர். இதற்குக் காரணம் சுயநலமும்) தங்கள் ஆங்கார மமதையுமேயாம்) தங்கள் ஆத்மாக்களுக்கு நஷ்டத்தை உண்டுபண்ணிக் கொண்ட அவர்கள் நன்னம்பிக்கை கொண்டவர்களாய் சமையமாட்டார்கள்.

(அன்ஆம் : 6·20)




வருடச் சந்தா ரூபா 4-0-0. மலாயா ரூபா 5-0-0.

தனிப் பிரதி பர்மா 0-6-6.

இந்தியா, ஸிலோன் 0-5-0. மலாயா 30 சதம்.


'46 Aug

# நூருல் இஸ்லாம்

##  களங்க மேகம் 

தற்சமய இந்திய அரசியல் வானம் மிகவும் பயங்கரமான மேகத்தைக் கொண்டதாயிருக்கிறது. இதற்கு மூலகாரணம் என்னவென்பதை நாம் அலசிப் பார்க்கவேண்டாம். ஆயினும், நாளுக்கு நாள் காங்கிரஸ் செய்து கொண்டுவரும் பச்சோந்தி வேஷம் வெறுக்கக்கூடியதா யிருக்கிறது. தனயனைத் தடவி தடவி வளர்த்து வந்தாள் தாய். தம்பி சரியான பிராயமடைந்ததும் தள்ளி உதைத்தானும் மகன். தன் ஆதிநிலையில் தாய் செய்த உதவியை யெல்லாம் மறந்துவிட்டான் தனயன். இதுதான் இது சமயம் காங்கிரஸ் செய்யும் வேலை. அறிவுள்ளோர் இதை ஆதரிக்கமாட்டார்கள். காங்கிரசில் முஸ்லிம் தலைவர்கள் ஏராளமாய்ச் சேர்ந்திருந்தார்கள் ஆதியில். சுமார் 25 ஆண்டுக்கு முன் வரை ஹிந்து - முஸ்லிம் ஐக்கியம் காங்கிரசிலிருந்து வந்தது. நாள் செல்லச் செல்ல வகுப்புவாதம் காங்கிரசில் உதயமாயிற்று. தேசியத் தன்மை மறைந்து வந்தது. இதைக் கண்டதும், காங்கிரஸ் இரும்புத் தூண்களாய் விளங்கிய மௌலானா அலீ சகோதரர்களும், என் காயிதெ அஃலம் ஜனாப் ஜின்னாஹ் கூட காங்கிரஸ் வட்டத்தினின்றும் வெளியேறி விட்டனர். காங்கிரஸ் ஹிந்துக்களின் வகுப்பு நலத்தைக் கவனிப்பதுபோல் முஸ்லிம்களின் நலத்தை நாம் கவனிக்க வேண்டுமென்று இத்தலைவர்கள் தீர்மானித்தனர். இதில் தவறு ஒன்றுமில்லை. காங்கிரஸ் ஹிந்துக்களின் பிரதிநிதி என்பதை மறுக்கிறது. முஸ்லிம் லீகோ, அகில இந்திய முஸ்லிம்களின் பிரதிநிதி என்று தாராளமாய்க் கூறுகிறது. இஃதிங்ஙனமிருக்க.

காங்கிரஸ் தனது அசல் ரூபத்தை பகிரங்கமாய்க் காட்ட மறுக்கிறது. முஸ்லிம் லீகோ பகிரங்கமாய் எதிரே நிற்கிறது. முஸ்லிம்களின் நன்மைக்காகப் பாடுபடுகிறது. ஆனால், காங்கிரசோ, ஹிந்துக்களுக்காகவும் முஸ்லிம்களுக்காகவும் பாடுபடுவதாய்க் கூறுகிறது. ஆனால் இவ்விரு சமூகத்தார் ஐக்யத்துக்கும் வேலை செய்வதில்லை. தன்னிடமுள்ள குறைகளை நிவர்த்தித்துக் கொள்ள வழி செய்யாமல், முஸ்லிம் லீக்மீது குறை சொல்லிக்கொண்டு அதன்மீது பாய்ந்துகொண்டே யிருக்கிறது. இதற்குக் காரணம் அதிகம் வேண்டியதில்லை. சமீபத்தில் சர்தார் பட்டேல்ஜீ அவர்கள் பம்பாயினின்றும் பாய்ந்து விழுந்து வெளியிட்ட அறிக்கையே போதுமானது. கோகலேயின் காரியதரிசியாய் (காங்கிரஸைச் சட்டைப்பையில் வைத்து வளர்த்தவராய்) ஜின்னாஹ் விளங்கியபோதும், அலீ சகோதரர்கள், ஹஸ்ரத் மோஹானீ, ஆஜாத் சுப்ஹானீ போன்றவர்கள் காங்கிரஸில் நின்று வீரகர்ஜனைகள் செய்து கொண்டிருந்த போதும், இந்த தடபுடல் பட்டேல்ஜீகளெல்லாம் எங்கிருந்தனர் என்பதை அவர்கள் பாலேதான் கேட்கவேண்டும். இத்தகைய தேசிய போர்வைக்குள் புகுந்து கொண்டிருக்கும் வகுப்புவாதிகள் காங்கிரஸில் வந்து கலந்ததனால்தான் அது கெட்டுப்போயிற்று. இன்னமும் கெடுவேன் என்ன பந்தயம் என்றால் இவர்களுக்கு புத்தி சொல்பவர்கள் யார்?

அ. இ. மு. லீக் தோல்வியடைந்து விட்டதென்றும், ஏமாந்துபோய் விட்டதென்றும், ஒரு சிலர் கூறுகின்றனர். முஸ்லிம் லீக், தேசிய ஸ்தாபனமல்ல, வகுப்புவாதக் கொள்கைகொண்டது என்று கூறுகின்றனர் வேறு சிலர். இது எப்படியாயினும், நாமிருவரும் சமாதானமாய் அரசியல் விவகாரங்களை தீர்த்துக் கொள்ளலாமென பல வகையிலும், பல சந்தர்ப்பங்களிலும் முஸ்லிம் லீக், தன் கோரிக்கையினின்றும் இறங்கி, இணங்கி, விட்டுக் கொத்தும்வந்தது. ஆனால் காங்கிரஸ் தனது நோக்கத்தைத் தீர்த்துக் கொள்ளுவதானால் முஸ்லிம் லீகுடன் கலந்தால் கைகூடாது என்று கண்டு கொண்டது. இதனால் தான் சமய சந்தர்ப்பம் போல் காங்கிரஸ் பாய்ந்தும், கைதவறி ஓடியும், மறைந்து

கொண்டும், சில சமயங்களில் பகிரங்கமாகவும், என்னென்னவோ திருவிளையாடல்களையெல்லாம், புரிந்து வருகிறது. இதனால் ஏற்படும் பயனென்ன. எங்கும் மாச்சரியம், கலக எண்ணம், விகர்ப்ப புத்தி என்பன போன்றவைகள் தான். நாட்டிற்கு நலன் செய்ய விரும்பினால் காங்கிரஸ், சர்தார் எண்ணத்தை விட்டுவிட்டு காலம் சென்ற பெரியார் C. R. தாஸ் வழியை பின்பற்ற வேண்டும். பழைய முறையில் ஹிந்து முஸ்லிம் ஒற்றுமைக்காகப் பாடுபட வேண்டும். இதுதான் விவேகம். நாட்டாண்மைக்காரனை, நாம் சொல்வதை நாட்டோர் எல்லாம் கேட்கத் தான் வேண்டுமென்று காங்கிரஸ் கட்டாயப் படுத்துமாயின், எண்ணத் தொலையாத விபரீதங்களும், எழுத முடியாத இன்னல்களும் தான் விளையும். இது நல்லதல்ல. காலம் கடந்து போகவில்லை. இதை காங்கிரஸும், கவர்மெண்டாரும் கவனிப்பார்களா?

## இது தர்மமா?

நம் 'நூருல் இஸ்லாம்' மாசிகையிலிருந்து வாரமாக வேண்டுமென்று பலமுறை இந்திய அரசியலாறை நாம் அணுகினோம். நாம் மட்டிலில்லை. நமது வாசகர்களின் அநேகம் பேரும், இதை வாரப் பதிப்பாக்க வேண்டுமென்று, மத்திய கவர்மென்டாரைக் கேட்டனர். கேட்டும் வருகின்றனர். இதற்கெல்லாம் தற்சமயம் காகிதமில்லை, காகிதப் பஞ்சம் அதிகம், வேறு காகிதம் கொண்டுவரவும், முடியாது. ஆகவே உங்கள் மாசிகையை, மாசிகையாகவே நொண்டி மாடுபோல் நடந்து செய்யச் சொல்லுங்கள். வாரப் பதிப்பாய் மாற்ற நாங்கள் அனுமதியளிக்க முடியாது. காரணம் காகிதமில்லை என்பதுதான் என்று அரசாங்க உயிர் நாற்காலியில் அமர்ந்திருக்கும் பகவான்கள் பதிலளிக்கின்றனர். மக்களின் தேவையை கவனித்து அதைச் செய்ய வேண்டியது அவர்கள் கடமையாயிருக்க, மக்கள் தங்களுக்கு வேண்டியதைச் சொல்லி, ஓயாமல் அழுதுக் கொண்டிருந்தாலும், ஏனோ அழுகின்றனர் என்பதைக் கூட காதில் வாங்கிக் கொள்வதில்லை அவர்கள். இவர்கள் தான் நமது தற்சமய அரசியல் ரக்ஷகர்கள். நமக்குரிய மேன்மை தலைவர்கள். நமக்கு பல நன்மைகளை செய்பவர்களும் இவர்கள் தான். இத்தகைய அரசியலார் நாம் ஓயாமல் கதறிக் கொண்டிருக்கும் பொழுது, நமக்கெல்லாம் அனுமதியில்லை என்று கூறிவிட்டு, ஒரு சில

(507-ஆம் பக்கம் பார்க்க)





# நாடும் நகரமும்



(எஸ். எ.)

## அரிசியும், அரசியலாரும்

நமது சென்னை மாகாணத்தில் இதுகாறும் இருந்துவரும் அரிசி ரேஷன் 10 அவுன்ஸையும் 8 அவுன்ஸாகக் குறைத்துவிட்டார்கள். பத்துஅவுன்ஸே அநேகப் பேருக்கு அரை வயிற்றுக்குக்கூட காணாது. அதனை எட்டு அவுன்ஸாகக் கொடுத்தால் அவர்களின் நிலை எப்படி யிருக்கும்? இதனால் பணக்காரர்களை விட ஏழைப் படும்பாடுதான் மிகவும் கொடுமையானதா யிருக்கும். சென்னையிலுள்ள பணக்காரர்கள் உயர்ந்த சம்பளக்காரர்களுக்கு அரிசியே தேவை இல்லை என்று சொல்லலாம். ஏனெனில், அவர்களுக்கு சர்க்கரை ரேஷன் அதிகமாகக் கிடைப்பதால் ஹல்வா, கோதுமை, கேசரி போன்ற உணவுப் பதார்த்தங்களை அதிகமாக உபயோகித்துகொண்டு அரிசியைக் குறைத்துக் கொள்ளலாம் ஆனால், சென்னை மாகாண தேசீய சர்க்கார் செய்துள்ள சட்டத்தின்படி சென்னையிலுள்ள ஏழை மக்களுக்கு சர்க்கரை மிகவும் குறைவாகவே கிடைக்குமாதலால், அவர்கள் அரிசியைத் தவிர வேறெந்த விதமான உணவும் சாப்பிட முடியாது. கோதுமையைச் சாதமாகச் சமைத்தால் ருசி இல்லை. ரொட்டியாகச் செய்து சாப்பிடுவதென்றால் நெய் வேண்டும். நெய் வாங்க நிறைய பணம் வேண்டும். பணத்துக்கு ஏழைகள் எங்கே போவார்கள்? இவ்வாறு ஏழைகளின் வயிற்றிலே, மட்டும் அடிக்கக் கூடிய இந்த ரேஷனை 10 அவுன்ஸிலேயிருந்து 8 அவுன்ஸாக மாற்றுவதற்கு சென்னை மாகாண அரசியலார் சொல்லும் காரணம் என்ன? ஸ்டாக் இருக்கக் கூடிய அரிசி மிகவும் குறைவாக இருப்பதால் இந்த ஏற்பாடு என்று பிரதம மந்திரி பிரகாசம் சொல்லுகிறார்.

மற்ற மாகாணங்களிலும் இதே விதமாக ரேஷனைக் குறைத்திருக்கிறார்களா என்றால் அதைப்பற்றிப் பிரதமருக்கே தெரியாது போல் இருக்கிறது! இதைப்பற்றிக் காங்கிரஸ் பத்திரிகை "தினமணி" எழுதுவதைப் பார்த்தால் மற்ற மாகாணங்களில் என்ன நடக்கிறதென்றே யாருக்கும் தெரியாது என்று நினைக்க வேண்டியிருக்கிறது. மற்ற மாகாணங்களில் ரேஷன் அளவு எப்படி யிருக்கிறதென்று இனிமேல் அறிந்து, சென்னையில் இருப்பதைவிட அந்த மாகாணங்களில் அதிகமாக இருக்கிறதென்று தெரிந்தால் மத்திய சர்க்காரிடம் சண்டை போட்டு அதிகமான அரிசியைப் பெற்று அரிசி ரேஷன் அளவை உயர்த்த வேண்டும் என்று 'தினமணி' பிரதமருக்கு புத்தி சொல்லுகிறது. எந்த காரியத்தை எப்பொழுது செய்வது? வாய்க்கும் வயிற்றுக்கும் பற்றாமல் அரிசி ரேஷனைக் குறைத்து ஏழைகளின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்வதற்கு முந்தியே மேற்படி

(506-ஆம் பக்கத் தொடர்)

புதிய ஆங்கில தினசரிக்கும், வேறு சில பாஷைகளில் வெளியாகும் புதிய பத்திரிகைகளுக்கும், அனுமதி கொடுத்து காகிதங்கள் வழங்குவதென்றால், இவர்கள் எண்ணம் என்ன நோக்கம் என்ன என்பதைப் தெரிந்து கொள்ள விரும்புகிறோம்

இத்தகைய முறையில் நடந்து கொள்ளுபவர்கள்தான் முஸ்லிம்களுக்கு நன்மை செய்யப் போகிறார்களாம். காங்கிரஸைச் சார்ந்தவர்களுக்கு சலுகைகள் பல கிடைப்பதும், அதைச் சாராதவர்களுக்கு ஒன்றுமில்லை என்று கையைவிரிப்பதும் ஏன்? காங்கிரஸைச் சாராத முஸ்லிம்கள் கவர்மெண்டாருக்குச் செலுத்த வேண்டிய வரிகளையும்' டாக்ஸ்களையும், கொடுக்க வில்லையா? மற்றவர்கள் பாலிருந்து கவர்மெண்டாரடையும் நன்மையை, முஸ்லிம்களிடமிருந்து அடையவில்லையா? எல்லாம் ஒன்றாய் இருக்க நடுநிலைமையிலுள்ள அரசியலார் என்னப்படுவோர் பக்ஷபாதமாய் நடந்து கொள்வதன் இரகசியமென்ன? நாம் அதிகம் ஒன்றும் கேட்கவில்லை. ஆமையை போல் ஊர்ந்து செல்லும் இம் மாசிகையை மாட்டு வண்டியைப் போல் சிறிது வேகமாய் நடத்த, வாரப் பதிப்பாக்க வேண்டுமென்றேபலகாலும்கேட்கின்றோம். இப்பொழுதும் அதேதான் கோரிக்கை. கவர்மெண்டார் அளிக்கும் பதிலெல்லாம் பொது ஜனங்கள் முன் எடுத்துக் காட்டவேண்டிய சமயமும் நேரும். எமது வேண்டுகோளை கவர்மெண்டார் கவனிப்பார்களா?

காரியத்தைச் செய்திருக்கக் கூடாதா? பிரதமரின் ஏற்பாடெல்லாம் ஏழைகளின் பொறுமையைச் சோதிப்பதாகத்தான் இருக்கிறது. எல்லாம் காங்கிரஸின் பெயரைச் சொல்லித் தப்பித்துக் கொள்ளலாம் என்ற தைரியம் போலும்!

**சர்க்கரையும் சர்க்காரும்**

"சர்க்கரை குழந்தைகளுக்கு கசக்குமா?" என்று "நாரதர்" எழுதுகிறது காங்கிரஸ் சர்க்காரின் ஏற்பாடுகளைக் காங்கிரஸ் பத்திரிகைகளே குறைகூறும் அளவிற்கு நாட்டிலே நியாய உணர்ச்சியும் தன் மதிப்பும் வளர்ந்திருப்பது வரவேற்கத்தக்கது. சென்னை சர்க்காரின் சர்க்கரை ரேஷன் திட்டத்தில் இரண்டு வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்கு சர்க்கரை கிடையாதாம் பின் யாருக்கு என்றால். 50 ரூபாய் முதல் 1000 ரூபாய் வரையில் சம்பாதிக்கிறவர்கள் அவர்களின் சம்பளம் எவ்வளவுக்கு எவ்வளவு உயர்ந்திருக்கிறதோ அவ்வளவுக்கு அவ்வளவு அதிகமாக சர்க்கரை ரேஷனைப் பெறுவார்கள்! அவர்களுக்குக் குழந்தைகள் இருக்கின்றனவோ, இல்லையோ அதைப்பற்றிக் கேள்வியில்லை. இரண்டு வயதுக்கு உட்பட்ட குழந்தைகளுக்குத்தான் சர்க்கரையே தேவையில்லை என்கிறார்களே! அவர்களுக்கு ஏன் இல்லை என்றால், ஒரு வயது வரை குழந்தைகளுக்குத் தாய்ப்பாலே கொடுக்கப்படுகிறதாம். அதற்குமேல் இரண்டு வயது வரை சாதம் மட்டுமே கொடுப்பதாக சர்க்கார் நினைக்கிறார்கள் என்று ஊகிக்கவேண்டியிருக்கிறது. அப்படியாயின், இரண்டு வயது வரை பசுவின்பாலே இல்லாமல் குழந்தைகள் வளரவேண்டுமென்று சர்க்கார் விரும்புகிறார்களா? இது உண்மையாயின் இந்த சர்க்கார் இருக்கிறவரையில் குழந்தைகள் பிறந்து வளரும் பாக்கியம் பெறாமல் இருப்பதே நல்லது!

ஒரு குழந்தையானது ஒரு வயது முதல் இரண்டாவது வயது முடிய சாதம் சாப்பிடுகிறது என்றால் அதற்கு சர்க்கார் அரிசி ரேஷன் தருகிறார்களா? மூன்று வயதுக்கு மேற்பட்ட குழந்தைகளுக்குத் தான் ரேஷன் தருகிறார்கள். சர்க்காரின் கருத்தும் செயலும் இவ்விதமாக முன்னுக்குப் பின் முரணாயிருப்பதைப் பார்த்து அழுவதா சிரிப்பதா?

பொதுஜன சர்க்கார் என்று சொல்லிக் கொள்ளும் காங்கிரஸ் சர்க்கார் சம்பளத்தின் அடிப்படையில் சர்க்கரை விநியோகம் செய்வது எவ்வளவு பொருத்தம் என்று பாருங்கள்! கொள்கைக்கும் நடத்தைக்கும் கொஞ்சம்கூட சம்பந்தமில்லாமல் இருப்பது ஒரு பக்கம் கிடக்க, அவர்களின் அபூர்வ ஏற்பாடு அறிவுக்கும் ஆராய்ச்சிக்குமாவது பொருத்தமாயிருக்கிறதா வென்று சிந்தித்துப் பாருங்கள் எல்லாம் குழப்ப மயம் ஜகத்! ஏழைகளுக்கு துரோகம் என்பதே எங்கு பார்த்தாலும் பேச்சு. இந்த உண்மையை அறிய "கல்கி" போன்ற காங்கிரஸ் பத்திரிகைகளையே பாருங்கள்.

"அட்வைஸரி சர்க்காருக்கு அநுபவ அறிவு போதாது; மக்களுடன் ஊடுருவிப் பழகிய காங்கிரஸ் வாதிகள் அந்தஸ்தானத்தில் இருந்தால் திறமையாக நிர்வாகம் செய்வார்கள்" என்று காங்கிரஸ் தலைவர்கள் செய்த பழைய பிரசாரத்தை நினைத்தால் சிரிப்புதான் வருகிறது.

## அறிவிப்பு!

"ரட்னபுரி டிஸ்ட்ரிக்ட், ஏஜெண்ட்: மெஸர்ஸ் நூருனி ஸ்டோர்ஸ், 74, மெயின் வீதி, கொடக்காவிலை. "நூருல் இஸ்லாம்" வேண்டுவோர் மேற்படியார்களிடமிருந்து பெற்றுக் கொள்ளலாம். ரட்னபுரியைச் சேர்ந்த மாதம்பை, காவத்தை, வல்லந்துறை கொடக்காவிலை, பள்ளவிலை, பள்மகுல்லை ஆகிய இடங்களில் வேண்டுவோர் மேற்படியார்களிடமிருந்து பிரதிகள் பெற்றுக்கொள்ளலாம்."





# சென்னையில் "நேரடிச் செயல் தினம்"

பணம் கொடுத்துப் பாஷாணம் வாங்கி விழுங்குகிறமாதிரிதான் இருக்கிறது சென்னைத் தமிழ் தினசரிப் பத்திரிகைகளை முஸ்லிம்கள் படிப்பது.

நேற்று சென்னையில் லீகின் "நேரடிச் செயல் தினம்" பெரு மழையிலும், வெகு பிரம்மாண்டமான ஊர்வலத்துடனும், லட்சக்கணக்கான முஸ்லிம்கள் கூடிய மகாநாட்டுடனும் இதுவரை சென்னையே கண்டிராத மகா பெரிய கண்கொள்ளா காட்சியாக அவ்வளவு வெற்றிகரமாக நடந்தது.

கல்லூரி மாணவர்கள், உத்தியோகஸ்தர்கள், வியாபாரிகள், பாக்டரி முதலிய தொழிலாளிகள் சகல பேர்களும் 100-க்கு 100 பேரும் நடத்திய இம்மாபெரிய ஊர்வலத்தையும், கூட்டத்தையும் எந்த மனச்சாட்சியுள்ள மனிதனும் மறைத்தும் திரித்தும் கூறவே முடியாது. இதுமாதிரியான என் இதில் கால்பங்கான ஊர்வலமோ கூட்டமோ காங்கிரஸ் சார்பில் நடந்தால் காங்கிரஸ் பத்திரிகைகள் ஊர் பெயர், ஆள்கள் பெயர், பள்ளிக்கூடங்கள், அதைக் கண்டவர்கள் பெயர் இன்னும் கட்டுக்கதைகள் எல்லாம் சேர்ந்து பல பெரிய தலைப்பங்கள், அதற்குக் கீழே அறுபத்தெட்டு உப தலையங்கங்கள் போட்டு ஒருநாள் பத்திரிகை நிரப்பிவிடும்.

சென்னை நகரில் பல மைல்களுக்கப்பாலிருந்தெல்லாம் பல சங்கங்களும் 100, 200, 500, 1000 பேர்களாக லீக் கொடிகளுடனும், பல்விதமான வசனங்கள் கொண்ட போர்டுகளுடனும் "அல்லாஹு அக்பர்" "பாகிஸ்தான் ஜிந்தாபாத்" என்ற கோஷங்கள் வானைப் பிளக்கக் கோஷித்துக்கொண்டு பீபிள்ஸ் பார்க் மைதானத்தில் கூடின. சுமார் லட்சம் முஸ்லிம்களுக்குமேல் குழுமியிருந்தனரென்றே உறுதியாகச் சொல்லலாம். அச்சமயம் பெருமழையும் ஆரம்பித்தது. அவ்வளவு பெரிய மழையிலும் அப்பெரிய கூட்டம் சிறிதும் அசையாமல் நனைந்து கொண்டே "அல்லாஹு அக்பர்" என்ற கோஷங்களுடன் 2 மைல் நீளத்தில் புறப்பட்டுத் திருவல்லிக்கேணியில் உள்ள வாலாஜா பெரிய மஸ்ஜிதில் கூடின. இப்படிப்பட்ட வைப

வம் சென்னை சரித்திரத்தில் இதுவே முதன்மை எனலாம்.

இவ்விஷயங்களை ஆங்கிலப் பத்திரிகைகளாவது சிறிதாவது பாரபட்சமற்ற முறையில் பிரசுரித்தன. ஆனால், சுதேசமித்திரன் பத்திரிகையோ "பெரிய மசூதியில் ஒரு பொதுக்கூட்டம் நடந்தது. நேற்று இத்துடன் ரம்ஜான் வெள்ளிக்கிழமையும் சேர்ந்ததால் பிரார்த்தனைக்காக ஏராளமான முஸ்லிம்கள் மசூதியில் கூடியிருந்தனர். ஜனாப் மஹமத் இஸ்மாயில் கூட்டத்திற்குத் தலைமை வகித்தார்" என்று மட்டும் பிரசுரித்திருந்தது. "நேரிடைச் செயல் தினம்" அனுஷ்டிக்கவந்த கூட்டமல்ல. வெள்ளிக்கிழமை கூட்டம் என மறைத்தும் திரித்தும் கூறி மக்களை ஏய்க்கிறது. அதுவும் கல்கத்தா கலவரம் எனக் கொட்டை எழுத்தில் போட்டு வரிசையாக அந்தச் செய்திகளைப் பிரசுரித்துவிட்டுக் கடைசியில்காலே அரைக்கால் காலத்தில் சென்னைச் செய்தியை இச்சென்னைப் பத்திரிகைப் போட்டுள்ளது.

கல்கத்தா செய்தியிலும் "ஹிந்துக் கோவில் மீது தாக்குதல்", "காங்கிரஸ் ஆபீஸ் தாக்கப்பட்டது" என்றெல்லாம் தலையங்கமிடுவதும், மசூதிக்கு தீ வைக்கப்பட்ட செய்தியைத் தெரியாதவாறும் தேடிப்பிடிக்கும்படியும் உள்ளே இதர செய்திகளோடு இணைத்து வாக்கியமிடப்பட்டும் காணப்படுகின்றன.

இப்படியேதான் தமிழ்நாடு சம்பந்தப்பட்ட மட்டில் இங்குள்ள ஆரியர்களின் ஆதிக்கத்திலுள்ள பத்திரிகைகள் தங்களுக்கு விரோதமாக தமிழ் முஸ்லிம்களையும், திராவிடர்களையும், கம்யூனிஸ்டுகளையும் பாவித்துப் பிரசாரங்கள் புரிந்து வருகின்றனர். இவ்வாரியர்கள் இவ்விதம் திரை மறைவில் செய்யும் காரியங்களால் தாங்கள் வெற்றி பெற்றுவிடலாமென்றும், வடநாட்டு மார்வாடிகள் பன்யாக்களின் காசும் கடாட்சமும் பெற்று சுயராஜ்யமும் பெரிய பெரிய உத்தியோகங்களும் பெற்று மற்றவர்களை நசுக்கிவிடலாமென்றும் பகற்கனவு கண்டு கொள்கின்றனர். என்றும் "சத்தியமே ஜெயம் பெறும்" என்பதை ஏனோ இவர்கள் மயக்கத்தால் மறந்து வருகின்றனரோ தெரியவில்லை!







# துய்ய இஸ்லாத்தின் திறந்த பாதை

(இருவை K. M. மீரான்)

"ஏண்டா கழுதை" இத்தனை நேரமும் எங்குச் சென்றிருந்தாய்? தொழுவத்திலே மாட்டுக்கு வைக்கோல் போடவில்லை, பருத்தி விதை அரைக்கவில்லை. சாணம் அள்ளவில்லை தடிப்பயலே! என்னடாத் திமிருனக்கு சம்பளம் போதாதென்று அதற்கு மேலே வழக்கு என்று கர்ஜித்தார். ஹசன் முதலாளி வேலைக்காரனிடத்திலே.

குளிக்கச் சென்றிருந்தேனென்று சாந்தமாகப் பதிலளித்தான் சுப்பு. குளிக்கவா? குளிக்காமலிருக்கமாட்டார் துரை. காலையிலென்னடா குளிக்க உனக்கு? சாயங்காலம் ஒரு வாளித் தண்ணீரால் மேல் அலம்பினால் போதாதோ? வைக்கோல் வைடா மாட்டிற்கு என்று தலையிலே ஒரு குட்டுவிட்டார் சுப்புவுக்கு. குட்டும் பெற்றுக் கொண்டு விரைந்து தொழுவத்திற்குச் செல்லுகின்றான் சுப்பு.

இதையெல்லாம் மாடியில் நின்று பார்த்துக்கொண்டு நிற்கின்றாள், 14 வயது பக்குவமுடைய ஹசன் முதலாலி மகள் சுலேஹா. "அய்யோ பாவம்" சுப்புவின் தலையில் குட்டிவிட்டார். வாப்பா குளிக்கச் சென்ற குற்றத்திற்கு யாராவது கடிந்துக் கொள்வார்களா? பெரும் முட்டாள்தனம் என்று வாப்பாவிடம் பெரும் எரிச்சலுடனே, சோகரஸம் ததும்ப, முணு முணுப்புடன் அப்படியே நின்றுவிட்டாள் சுலேஹா.

சுப்பு, வீட்டில் வேலைக்கமர்ந்த அன்னளிலேயே, சுலேஹா அவனிடம் மிகவும் பிரியமுள்ளவளாக இருந்தாள். சுலேஹாவுக்கு சகோதரம் இல்லையே என்ற வருத்தம் சுப்புவின் தோழமையால் அகன்று வந்தது. சுப்பு நான்காவது வகுப்பு வரையிலும் படித்திருந்தான். அதிலும் இவனுடைய பொன்னிற மேனியும், தாமரை மலர் போன்ற முக மலர்ச்சியும் சுலேஹாவின் அன்பை வளர்த்திக் கொண்டே வந்தது.

முதலாளி, இவனைக் குற்றப்படுத்தி தண்டிக்கும்போதெல்லாம் சுப்பு சுலேஹாவிடம் சங்கடத்தைச் சொல்லுவான். அப்போது சுலேஹா தாங்க முடியாத மனோவேதனையுடன், சுப்புவிடம் மிகவும் அனுதாபமுடையவளாய் பல எண்ணங்களும் எண்ணி ஏங்கி நிற்பாள். சுப்பு ஏற்கெனவே நல்ல சுறுசுறுப்பும், நல்ல சுபாவமும் உடையவனாகயிருந்தான். சுப்புவின் ரூபலாவண்யத்தை சுலேஹா தரிசிக்கும்போதெல்லாம் இவன் ஏன் ஒரு வேலைக்காரனாகவும், தாழ்ந்த ஜாதிக்காரனாகவும் ஜீவிக்க வேண்டும். அவன் நம் மதத்தைச் சார்ந்தவனாகயிருந்தால் ஆஹா...... என்றெல்லாம் பலவித எண்ணங்கள் அவள் உள்ளத்தில் அலைமோதிக்கொண் டிருக்கும்.

அவ்வாறே நாளடைவில் சுப்புவிடம் சுலேஹாவுக்கு மிகுந்த தரிசன மூண்டாகிவிட்டது. "சுப்பு" வென்றொரு சினேகச் சாயல் எப்போதும் சுலேஹாவின் வீட்சணத்தில் தாண்டவமாடிக் கொண்டிருக்கும். சுப்புதன்வாலிபப் பருவத்திலும் வீட்டில் அவன் செய்யும் இழிந்த வேலைகள் சுலேஹாவுக்குக்குப் பிடிக்கவில்லை. சுப்புவுக்கு எப்படியும் ஒரு விமோசன மூண்டுபண்ண வேண்டு மென்னும் போரவல் இவளை வாட்டிற்று.

ஒரு நாள் இரவு சுப்பு, முதலாளியின் அடிப் பொறுக்க முடியாமல் வீட்டைவிட்டு கிளம்பிவிட வேண்டுமென்று தீர்மானித்து சுலேஹாவை சந்தித்து, எனக்கு இனி இங்கு இருக்க முடியாது, நான் எங்கேயாவது போகத் தீர்மானித்து விட்டேன். தாங்கொண்ணவண்ணம் என்னைத் தண்டித்துவிட்டார் என்று சொல்லிக் கொண்டே அழுதான். சுப்புவின் தேகத்தில் பதிந்திருந்த அடிகளைக் கண்ட சுலேஹாவின் உள்ளம் நடுங்கிவிட்டது. தகப்பனிடம் மிகவும் கோபம் கொண்டவளாய் அவரை ஏதோ புறுபுறுத்து கொண்டு சுப்புவைச் சாந்தப்படுத்த முயன்றாள். சுப்பு பிடிவாதமாகப் போய் விடுவேனென்றும், தானெங்கு வேலைக்கமர்ந்தாலும் கூடுமானவரை அடிக்கடி இங்கு வந்துப் போவேனென்றும் அழுகைக் குரலுடனே சுலேஹாவிடம் சொன்னான். தாயாரிடம் சொல்லியாவது, இனி உன்னை அடிக்க வேண்டாமென்று சொல்லுகிறேனென்று சாதித்தாள் சுலேஹா. சுப்பு பிடிவாதமாக இருக்கமாட்டேனென்று சொல்லிவிட்டான். சுலேஹாவின் உள்ளத்தில் இடி விழுந்ததுபோலிருந்தது. ஒரு பரிஹாரமும் சுப்பு விஷயத்தில் செய்ய அவளுக்கு அப்போது

தோன்றவில்லை. ஆயினும் அவள் பலவாருகச் சிந்தனை செய்யத் தொடங்கினுள். இவன் எங்கேயாவது போனாலும் இதுபோலவே வீட்டு வேலைக்காக நிற்பான். அங்கும் இதேக் கஷ்டம்தான். என்ன வழி செய்ய ஒன்றும் தோன்றவில்லையே என்று எங்கி நின்ருள் சுலேஹா. சுப்பு விடை கொடுங்களென்று ஆத்திரப்படுகின்ருன். உடனே சுலேஹா அவனைப் பார்த்து, சுப்பு! உன்னிடம் ஒரு முக்கிய சமாசாரம் சொல்ல வேண்டியிருக்கிறது. நீ எங்கேயாவது போகத் தீர்மானித்து விட்டால் போய்விடு. என்னிடம் சிறிதேனும் அன்பிருந்தால் காலையில்தான் இவ்விடம்விட்டு அகலவேண்டும் என்று உருக்கமாக கெஞ்சிக் கேட்டாள் சுலேஹா. சுப்புவின் பிடிவாதம் சுலேஹாவின் உருக்கத்திற்கு அடிப்பணிந்தது. எப்படியும் காலையில் போகிறது என்று தீர்மானித்துப் படுக்க சென்று விட்டான் சுப்பு. சுலேஹாவும் தன் படுக்கயறையில் சென்று படுத்துக் கொண்டாள்.

சுப்புவின் பிரிவை நினைத்து வருந்தினவளாய் பலவித எண்ணங்களையும் எண்ணிக் கொண்டே சுப்புவின் விமோசனத்தில் நாம் ஏன் மனப்பூர்வமான தியாகம் செய்யக் கூடாது, எனத் துணிந்து சுப்பு வென்ன? எந்த வகையிலாவது மோசக்காரனு? இல்லையே! நமக்கும் ஒரு மணமகன் தேவைதான் 5000–6000 கேட்கும் பணப் பிசாசுகளுக்கு வாழ்க்கைப்பட்டு நாம் ஏன் அடிமைகளாகவும், அடுப்பூதும் துருத்தியாகவும், பிள்ளைகள் பெறும் இயந்திரமாகவும், ஜீவிக்கவேண்டும்; என்றெல்லாம் அவள் எண்ணியபோது சுப்புவின் இனம் அவளுக்கு ஞாபகத்திற்கு வந்ததும், கையைக் கட்டிக் கொண்டே ஆழ்ந்து சிந்தித்தாள் சுலேஹா. உடனே யாரோ அவளுக்கு எடுத்துச் சொல்லியது போல, ''இஸ்லாம்'' எந்த வகுப்பினருக்கும் சமத்துவமளிக்கக் கூடியது என்ற ஞானம் பிறந்தது சுலேஹாவுக்கு. உடனேயே பொன்ஞணியில் சென்று பல வகுப்பினரும் இஸ்லாத்தைத் தழுவி போதிய மதப்பாண்டித்தியங்களுடன் வந்திருப்பதும் அவள் ஞாபகத்திற்கு வந்தது.

உடனேயே அவள் கழுத்திலிருந்து இரு மாலைகளையும் கழட்டிக் கொண்டு சுப்புவின் படுக்கையை நோக்கிச் சென்ருள். சுப்புவைத் தட்டி எழுப்பினுள். சுப்பு விழித்ததும் எஜமானனி என்றறிந்து மிக வணக்கத்துடன் ஒதுங்கி நின்ருன். சுலேஹா சுப்புவைப் பார்த்து சுப்பு! நான் உன்னை மனப்பூர்வமாக சிநேஹிக்கின்றேன். உன் விமோசனத்துற்காக ஒரு வழிச் சொல்லுகிறேன். அதை நீ சிரமேற் கொண்டு என் முயற்சிக்கு வெற்றி காட்ட வேண்டும் என்று சொன்னுள். உடனே சுப்பு தங்களுக்காக எதையும் செய்யத் தயாரா யிருக்கின்றேன் என பதிலளித்தான்.

சுலேஹா:-சுப்பு! இதோ யிருக்கும் இரு மாலைகளையும் கையிலெடுத்துக் கொண்டு இப்பொழுதே பொன்ஞணிக்குச் செல்ல வேண்டும். அங்கு யாராவது ஒரு முஸ்லிமைச் சந்தித்து எனக்கு இஸ்லாம் மதத்தைத் தழுவ விருப்பமிருக்கிறது என்று சொல்ல வேண்டும். அவர்கள் அதற்கான ஒழுங்குகளைச் செய்வார்கள். நீ அதன்படித் தவருமல் நடந்துக் கொள்ள வேண்டும். இவ்விரு மாலைகளையும் நீ சற்று தூரம் சென்றதும் விற்பனைச் செய்து பணத்தை உன் செலவு வகைக்குப் பத்திரப்படுத்திக் கொள்ளவேண்டும் என்று சுப்புவிடம் சுலேஹா வெகு விமரிசையாகச் சொன்னுள். சுப்பு இதையெல்லாம் கேட்டு நின்று பிரம்மித்து விட்டான். இஸ்லாம் மதத்தைத் தழுவுவது என்ற விஷயம் இயற்கெனவே அவனுக்குப் போவலாக யிருந்தது. எனினும், மாலையை எடுத்துச் செல்லும் விஷயத்திலும், பொன்ஞணியில் ஆதரவு கிடைக்குமாவென்ற விஷயத்திலும் சிறிதுச் சந்தேகமும், பயமுமிருந்தது. சுப்புவின் தயக்கத்தைக் கண்ட சுலேஹா, சுப்பு! ஏன் ஆலோசிக்கின்ருய்? புத்திச்சாலித்தனமாகவும், ஊக்கமாகவும் நடந்துக்கொள். ''இஸ்லாம்'' பரிசுத்தமானது. இஸ்லாத்தின் கதவு எப்பொழுதும் திறந்திருக்கும். இஸ்லாத்தின் சட்ட திட்டங்கள் விரிந்த அறவம் பரந்த நோக்கமும் கொண்டது. எறும்பு கடை எண்பத்து நான்கு லட்சம் ஜீவராசிகளையும் சிருஷ்டித்துப் பரிபாவிக்கும் எல்லாம் வல்ல இறைவன் ஒன்று என்பதை உல கத்திற்கு எடுத்துக் காட்டிய பெருமை இஸ்லாத்தையே சாரும். நாயன் காப்பாற்றுவான் இப்பொழுதே செல். ஆங்காங்கே வீட்டு வேலைகளுக்கமர்ந்து வாழ்க்கையைப் பாழ்ப்படுத்திக் கொள்ளாதே. போய்ச் சேர்ந்ததும் இந்த விலாசத்திற்கு ஒரு கடிதம் எழுது. அப்புறம் என் பதிலைக் கண்டு எழுதினுல் போதுமென்று சொல்லி ஒரு முகவரித் துண்டையும் சுப்புவிடம் கொடுத்தாள் சுலேஹா. சுப்பு சுலேஹாவின் மாலைகளையும் முகவரித்துண்டையும் பெற்றுக் கொண்டு அக்கணமே அவ்விடத்தை விட்டும் கிளம்பிவிட்டான்.

[N. B. கதையில் வரும் பெயர்கள் யாவும் கற்பனைப் பெயர்கள்.]

(தொடரும்)



# சண்பகவல்லி தேவி



அல்லது

## தென்னுடு போந்த அப்பாசிய குலத்தோன்றல்

(நாகூர் சித்தீ ஜுனைதா பேகம்)

### 11

(முன் 306 - ஆம் பக்கத்தொடர்)

இரவு மணி 10. அரண்மனையின்பூங்கா எங்கும் பேரமைதி, உலகமே தூங்கிற்று. அழகிய வெண்ணிலா எங்கும் ஒளி வீசியது. மக்களை மகிழ்ச்சிப் பெருக்கில் ஆழ்ந்தவல்ல வெண்ணிலாவின் தண்கதிர்கள், நம் சண்பகத்தைத் துண்பக்கடலில் ஆழ்த்தின. அப்பூங்காவின் ஊடே, இவ்வுலகையே மறந்த நிலையில் அவள் உலாவிக்கொண்டிருந்தாள்.

18 ஆண்டுகாலமாகத் தன் தந்தையோடு உறைந்து வந்த அவள், தந்தையின் அன்பன்றி வேறெதனையும் அறியாள். இல்லாளின்றி ஏகாந்தமாய் வாழ்ந்த அவ் ஏந்தல், தன் இளம் மகளிடத்து எல்லையற்ற அன்பைச் சொரிந்தான். ஆனுல், ஒரு மடந்தையை வாள்விற்குப் பயிற்றுவிக்குங்கலையை அவன் எங்ஙனமறிவான்? அக்கலையை ஒரு அன்னையே அறிவாள். வேனிற்குரிய மலர் வனப்பு இயல்பாகவே உண்டாதல்போல, இளமைக்குரிய அன்பும் ஆசைகளும் இயறகையாகவே இந்நங்கையின் மனத்தில் அரும்பின. அந்த அரும்புகளை வஜீர் அப்பாஸ் பேயின் அன்புப் பார்வை மலர்த்தியது. எனவே, அங்குள்ள கல்மேடை யொன்றில் அமர்ந்து, தன் சிந்தனை முழுதையும் ஒரேவழி செலுத்தி, தன் ''கடமை'' என்று உன்னி, ஊட்டி வளர்த்த ஒரு உணர்ச்சிக்கும், காதலுக்கும் இடையில் போராடினுள். பேதை என் செய்வாள்! இயற்கையின் கனிந்த கூப்பாட்டை யாங்ஙனம் மறுக்க வியலும்? காதலுக்காகத் தன் கடமையை மறப்பதா? தன் காதற் தந்தையைத் தான் இனிக்கான இயலாது. அதற்குக் காரணமான அந்த அழகிய வீரனை, அவள் உள்ளம் விழைந்தது. அவ் வீரனேடு நேர் முகமாயும் போரிட்டாயிற்று. இனிச் சூழ்ச்சியால் வீழ்த்தவேண்டும். அன்பு மொழி பயில அரண்மனைப் பூங்கா ஏற்றதென்றுபொய் மொழி புகன்று, வஜீர் அப்பாஸ் பேயைத் தனியே வருமாறு வேண்டி அவரை ஒருவரும் அறியாமல் சிறைபிடித்து விடுவதென்ற திட்டம் போட்டிருந்தாள். இந் நோக்கத்துடன் தான். பொறுக்கப்பட்ட 15 போர் வீரர்களுடன், சேனைத்தலைவன் வீரநாதன் பூங்காவையடுத்த கோட்டைக் காட்டிலே ஒளிந்திருந்தான். ''யான் குரலெழுப்பி இசை பயில்வேன். அதுகேட்டதும் நீ விரைந்து வந்து வஜீர் அப்பாசைச் சிறைசெய்'' என்று சண்பகவல்லி அவனைப் பணித்திருந்தாள்.

திடீரென எழுந்து பின்புறம் நோக்கினுள். ஆம் - அவர் தான் - அன்பும் ஆற்றலும் ஒருங்கே யமைந்த நம் வஜீர்தான். மெல்ல மெல்லத் தயங்கித் தயங்கி வந்துகொண்டிருக்கிருர்!

''செல்வி, ஏன் என்னை இங்கு வருமாறு பணித்தாய்? உன் மனம் இளகிற்ரு? என்னை மணக்க விருப்பந்தானே!''

சண்பகவல்லி ஏதும் பதில் கூறவில்லை. மீண்டும் வஜீர் அப்பாஸ் அவளை நோக்கி, ''சண்பகம்! என்னருஞ் சண்பகம்! பதில் சொல்ல மாட்டாயா? உனக்கு விருப்பமில்லையா? உண்மையைச் சொல், நான் போய்விடுகிறேன். உன்னை வற்புறுத்துவேனு?''

சண்பகவல்லி ஏதோ கூற வாய்யெடுத்தாள். ஆயினும், ஏதும் மொழுந்தாளில்லை. தான் மொழிய விரும்பிய மொழிகளை மொழிதற்கு மனேபலமற்று சோர்ந்து கிடந்தாள்.

மீண்டும் வஜீரே பேச ஆரம்பித்தார். ''அரசிளஞ் செல்வி! நான் எந்தப் பெண்களோடும் பேசியறியேன். பழகியது மில்லை. பழகவேண்டிய அவசியமு மேற்பட்டதில்லை. ஆகவே, பெண்கள் விரும்பத்தக்க பேச்சுகள் எவை யென்பதை நானறியேன். உலகிலே ஆடவனுய்ப் பிறந்து நான் விரும்பிய - விரும்பும் பெண்மணி ஒருத்தியே. அவ்வொருத்தியைத் தவிர வேறெவர் மாட்டும் என் அன்பு சென்றதில்லை; இனி நான் இறக்குமளவும் செல்லப் போவதுமில்லை. அந்த ஒருத்தியை என் மனங்கவர்ந்த அந்த மங்கையை இந்த அழகாபுரியிலே விட்டு விட்டு, நான் தனியே

தௌர்பாக்கியனால் "நாம்" தேயத்திற்குப் போகிறேன்" என்று கூறிவிட்டு முகத்தைக் கையினால் மூடிக்கொண்டார். செருமுனையிலே வீரவாளேந்தி அஞ்சா நெஞ்சோடு பொருத்த அவ் அண்ணலின் நீண்ட பெருமூச்சால், அவரது உடல் குலுங்கி, விசாலமான மார்பகம் விம்மியது.

அன்பிற்கிளகாத உயிருண்டா? அதிலும் பெண்மை யுள்ளம்! தாய்மையின் கனிந்த அன்பு அவள் உள்ளத்தே ததும்பி வழிந்தது. வஜீர் அப்பாஸ் பேயின் நிலையைக் கண்ணாரக் கண்டு நெஞ்சார உணர்ந்த அவ் எந்திழையாள், மனங்கரைந்து செயலற்று அவரையே நோக்கிக் கொண்டிருந்தாள். அந்த அன்பின் பிரவாகத்தைத் தடுக்க அவள் அஞ்சினாள். அவள் கண்களில் நீர் சுரந்தது. அவளை யறியாமல் அவளுக்குத் துக்கம் பொங்கியது.

"வீரர் தலைவ!" அந்தத் தொனி கிணற்றிற்குள்ளிருந்து பேசுவதைப் போலிருந்தது. பேச்சு தொண்டையிலிருந்து வெளிவாவில்லை, என்றாலும், தன் பார்வையாலேயே உட் கருத்தை வெளிபிடுவாள் போல வஜீர் அவர்களின் முகத்தை நோக்கினாள். அந் நோக்கு ஒரு நொடிப் பொழுதே நின்றது. எனினும், அந்நோக்கின் மேன்மையையும், இனிமையையும், கனிவையும் மறைப்பதற்கு சண்பகத்தாலேயே முடியவில்லை. திருமகளே போன்று தன் எதிரே நிற்கும் பேரழகி, தன் சாவை விரும்பி மாள்கின்றாள் என்பது வஜீர் அப்பாஸ் பேவுக்கு அப்பொழுது தெரியாது.

கருமேகம் வெண்ணிலாவை மறைத்தது. "அண்ணலே! தாங்கள் என்னை நேசிப்பது உண்மையாயின், இப் பெண் பேயைவிட்டு ஓடிவிடுங்கள். தங்களைச் சிறை செய்யக் கருதியே இங்கழைத்து வந்தேன். போர் வீரர் சிலருடன் வீரநாதன் நான் குறிப்பறிவிப்பின் சிறை செய்ய வருவான். என்னை மன்னியுங்கள். நான் அறியாது செய்த பிழையைப் பொறுக்க வேண்டும்" என்று கெஞ்சினாள் சண்பகவல்லி. அவள் துக்கம் தொண்டை அடைக்கக் கதறினாள்.

"என் அன்பே! அது உன் குற்றமன்று. என் குற்றமே உன் தகப்பனைக் கொன்ற என்னை நீ வெறுப்பது இயல்புதானே! நீ





என்னை வீழ்த்த விரும்பியது, என்னிடத்திலுள்ள அன்புக் குறைவால் அன்று. உன்கடமை என்று எண்ணினால், அதனால் என்னைக் கொல்ல விழைந்தாய். என் அன்பிற்குரியாய் கண்ணீர் விடாதே. நீ என்னிடத்து கொண்டுள்ள அன்பின் மேன்மையை அறிவேன். கடமையாற்றலின் இன்பமே வாழ்க்கையின் இன்பம். மக்களை நிறை முதலாக்குவதும் அதுதான். உன் தந்தைக்காக உன் வாழ்க்கையையே தியாகஞ் செய்ய விரும்பினாய். பிறர் நலத் தனது இன்பத்தைத் தத்தம் செய்யும் அத்தகைய பெரியதோர் தியாகமே மனித வாழ்க்கையின் இலட்சியம். அத்தகைய இலட்சியவாதியாய்த் திகழ்கின்றாய். சண்பகம்! நான் போய் வருகிறேன். இந்த இரவு நடந்த நிகழ்ச்சியின் நினைவே நீ எனக்கு வழங்கிய பரிசு."

சண்பகம் வாய் திறக்கவில்லை. அவரையே உற்று நோக்கிக் கொண்டிருந்தாள். "ஐயோ" என்று வீறிட்டலறிய தொனியைக் கேட்டதும் வஜீர் அப்பாஸ்பே அவர்கள் திரும்பிப் பார்த்தார்கள். சண்பகம் திடீரென ஏற்பட்ட மன அதிர்ச்சியினால் கீழே விழுந்து விட்டாள். ஓடிவந்த வஜீர் அப்பாஸ் அவளைத் தம் கைகளிலே ஏந்தி, அவளின் முகத்தை ஏறிட்டு நோக்கினார். அவளும் அவரைப் பரிதாபமாகப் பார்த்தாள். கண்ணொடு கண்ணேக்கின், வாய் சொற்களால் என்ன பயன்?

## 12

காலை நேரம். பகலவன் மெதுவாக எழுந்துக் கொண்டிருந்தான். பச்சைப் பசேலென்ற காட்சி. அரண்மனையின் அந்தப்புற சித்திர வேலைப்பாடமைந்த கட்டிலொன்றில் செல்வி சண்பகம்வல்லி சயனித்திருந்தாள். அவளருகே நமது வஜீர் அப்பாஸ் பே அவர்கள் அழகியதோர் ஆண் குழவியைக் கையிலேந்திய வண்ணம் உட்கார்ந்திருந்தனர். தோழிகளிருவரும் வாய் பேசாது மற்றொருபுறம் உட்கார்ந்திருந்தனர். அங்குமிங்கும் சில வேலைக்காரிகள் போய்வந்துக் கொண்டிருந்தனர். நெருங்கிய உறவினரான முபாரக் (ஜெப வீரராம பாண்டியர்) அவர்களிடையே வீற்றிருந்தனர்.

"குழந்தைக்கு என்ன பெயரிடலாம்?" என்றார் முபாரக்.

"குழந்தை எவ்வளவு அழகாயிருக்கிறது. பார்த்தாயா? சலீமா என்ன பெயர் வைக்கலாம்? நீ தான் சொல்லேன்!" என்றார் வஜீர் அப்பாஸ் பே சண்பகத்தை நோக்கி.

"அப்பாவின் பெயரை வைத்தாலென்ன?" என்றாள் இனிமைத் ததும்ப.

"அது எப்படி முடியும் சலீமா? உன்னை நாங்கள் சண்பகமென்றா அழைக்கிறோம்? இல்லையே! அப்படியானால், உன் குழந்தையை அழகேந்திரனென்று எப்படியழைக்க முடியும்?" என்றார் முபாரக்.

"பெயர் என்ன வைத்தாலும், நான் அப்பாவின் பெயரைச் சொல்லியே அழைப்பேன். அப்படியிருந்தால் எவ்வளவு மகிழ்ச்சியடைவார்!" என்றாள் சலீமா. அவள் கண்களில் நீரரும்பியது.

"மாமா, அவள் விருப்பப்படியே அவள் அழைக்கட்டும், நாம் குழந்தைக்கு எங்கள் குலத்தோன்றல், ஹாரூன் அல்ரஷீத் பாத்துஷா அவர்களின் பெயரையே வைப்போம். உங்கள் விருப்ப மெதுவோ?" என்றார் வஜீர் முபாரக்கை நோக்கி,

"உங்கள் விருப்பமே என் விருப்பமும்" என்றார் முபாரக்.

குழந்தை, முபாரக் கையிற் கொடுக்கப்பட்டது. பாங்குச்சொல்லி, "முகமது ரஷீத்பே, முகமது ரஷீத்பே" என்று எல்லாரும் அழைத்தனர்.

"குழந்தைத் தாயார் கையிற் கொடுப்போம்" என வஜீர் கூறலும், தோழியரிருவரும் ஓடிவந்து, குழந்தையை வாங்கி மாற்புற அணைத்து, அன்னையின் கையில் ஈந்தனர். அன்னை சலீமா, ஆர்வத்தோடு வாங்கி, கொவ்வைக் கனியெனச் சிவந்திருந்த அதன் இதழ்களில் முத்தி, "என் கண்ணே, அழகேந்திரா" எனலும், அவள் கண்கள் கதங்கி, கண்ணீர் வடிந்தது. (முற்றிற்று.)

—:—

### மாதம் 15,000 மோட்டார்கள் :

தனி நபரின் சொந்த உபயோகத்துக்காக மோட்டார்கார்கள் பிரிட்டனில் இப்பொழுது ஏராளமாக உற்பத்தியாகி வருகின்றன. சமாதான கால உற்பத்திபற்றி பிரிட்டிஷ் வர்த்தகப் போர்டார் சமீபத்தில் வெளியிட்டுள்ள புள்ளி விவரங்களில் முதன்மையாக விளங்கும் இனங்களில் இதுவும் ஒன்றாகும்.

தனி நபரின் சொந்த உபயோகத்துக்காக கார்கள் 1944-ல் மாதத்துக்கு 125 வீதமே உற்பத்தியாயின. சென்ற வருஷம் ஜனவரி, ஆகஸ்டு மாதங்களில் இந்த எண்ணிக்கை மாதத்துக்கு 600-ஆக உயர்ந்தது. இவ்வருஷம் மார்ச்சு மாதத்தில் 12,419 கார்களும், ஏப்ரலில் 15,348 கார்களும் உற்பத்தியாகியிருக்கின்றன. ஏப்ரல் மாத உற்பத்தியில் சுமார் 48 சதவிகிதம் ஏற்றுமதியாகும்.





# சிந்தித்துப் பார்! சோதரா?

(எம். ஏ. கரீம் ஜாஹிரா, கல்லூரி, மருதானே.)

பாக்கிஸ்தான் என்றதும், பயமடையும் சோதரா. சற்று நிதான புத்தியுடன் சிந்தித்துப்பார். நாங்கள் சொல்வதிலே குரோத மிருக்கிறதா விரோத மிருக்கிறதா துரோகமிருக்கிறதா என்று சுதந்திரம் தா. சுயநிர்ணய உரிமைதா என்று ஏகாதிபத்தியத்தை கேட்கிறாய். அதைத்தான் நாங்களும் கேட்கிறோம். ஏகாதிபத்திய சுரண்டலிலிருந்தும் ஹிந்து காங்கிரசின் ஆதிகத்திலிருந்தும் விடுதலை பெற - சுயநிர்ணய உரிமை பெற. வழியாகிய பாக்கிஸ்தான் கேட்கிறோம். இதிலே என்ன தவறு இருக்கிறது. இந்திய மக்கள் சுதந்திரர்களாக வேண்டும். இந்திய தாயின் அடிமை விளங்கு அறுபட வேண்டும். இந்திய மக்களின் வாழ்க்கை நிலை உயர வேண்டும். அரசியல் அறிவியல் ஆகியவற்றிலே இந்தியா மேம்பாடடைய வேண்டும். என்றெல்லாம் கூறும் நீ உமது சகோதரர்களாகிய எங்களை அரயசியலிலே அடிமைபடுத்த - எங்கள் மீது ஆதிக்கம் செலுத்த மறைமுகமாக சூழ்ச்சி செய்கிறாய். என் பகிரங்கமாகவும் இகழ்ச்சி செய்கிறாய்; அரேபியாவிலிருந்து வந்தவர்கட்கு ஆளநாடு வேண்டுமாம் என்று.

சோதரா? நாங்கள் இந்தியத்தாயின் வயிற்றில் பிறக்கவில்லையா? தாயின் துயாகண்டு இரத்தக் கண்ணீர் வடிக்கவில்லையா? உரிமையோருக்கு உதிரம் சிந்தவில்லையா? விடுதலையோருக்கு வீறு கொள்ளவில்லையா? சகலமும் தத்தம்செய்யப் படவில்லையா இவை உனது சிந்தனைக்கு வரவில்லையா? சகோதரா சிந்தித்துப்பார்'' உடன் பிறந்த சகோதரனுக்கு உரியவயது வந்தபோது தனித்து வாழ ஆசைப்பட்டால் பிரித்து விடுவது தான் உண்மையான சகோதரனின் நேரிய முறை. அதை விடுத்து ஒற்றுமை உபதேசம் செய்வது வஞ்சக நெஞ்சம்படைத்த சுயநலமிகுந்தவனின் முறை. எம்மிடத்திலே உண்மையான சகோதர வாஞ்சை உணக்கு இருக்கும் பட்சத்தில், ராமராஜ்ய கனவு காணமாட்டாய். எங்கள் முன்னேற்றத்திலே உனக்கு உண்மையான சிரத்தை இருக்குமேயானல் வர்ணச்சிரம தர்மம் பற்றி பேசமாட்டாய். எமது ஒத்துழைப்பு உனக்கு வேண்டுமேயானல் "போரிட்டு பாகிஸ்தானை பெற்றுக்கொள்?'' என்று சொல்லமாட்டாய். நாங்கள் உன்னை சந்தேகிக்கிறோம். உனது சூழ்ச்சி எங்களுக்கு நன்ருக விளங்குகிறது. ஆம் எங்களை கவிழ்க்க நினைக்கிறாய், எங்களை அடிமைகளாக்க நினைக்கின்றாய். எம்மை அறிவிழிகளாக்க நினைக்கின்றாய். உனது எண்ணம் நிறைவேறாது.

இந்திய மண்ணிலே கடைசி முஸ்லிம் ஒருவன் இருக்கும் வரையிலும் உனது எண்ணம் ஒருபோதும் ஈடேறாது. இது சத்தியம்.

"ஹே" ஹிந்துசகோதரனே உன்னை நான் கெடுக்க விரும்பவில்லை உன்னை நான் பகைக்க விரும்பவில்லை நமது கலாச்சார பண்புகள் யாவும் வேறுபட்டு இருப்பதால் நாம் ஒன்றுபட்டு வாழ முடியாது. ஆகவே அரசியலிலே நாம் பிரிந்து வாழலாம் என்று சொல்கிறோம். அப்பொழுதுதான் நமது ஒற்றுமை நீடித்து நிற்கும் நமது சகோதர வாஞ்சை அதிகமாகும். இன்றேல் நமக்குள் சண்டை ஒழியாது என்பது மட்டும் உண்மை.







# தேசிய முஸ்லிம்களுக்கு ஒரு வார்த்தை

(கடையநல்லூர் K. M. முஹம்மது யூசுப், B.A.,)

இன்று இந்திய முஸ்லிம்கள் கட்டுப்பாடுடன் இருக்கிறார்கள். ஒற்றுமையுடன் ஒரே தலைவரின் கீழ் ஒன்றுபட்டு இருக்கிறார்கள். ஒரே இலட்சியத்திற்காக உயிரை விடவும் தயாராக இருக்கிறார்கள். உண்மைதான் இதை சமீபத்தில் நடந்த தேர்தல் தெளிவாக்கிவிட்டது. ஆளும் பிரிட்டிஷ் வர்க்கமும் அறிந்துக் கொண்டது. ஆனல், ஒரு சில முஸ்லிம்கள் விரல்விட்டு எண்ணக்கூடிய அளவிலே உள்ள முஸ்லிம்கள்—ஆம்! அவர்கள் முஸ்லிம்கள் தான். அகில இந்திய முஸ்லிம் லீக் சபையிலிருந்து ஒதுங்கி நிற்கின்றனர். அவர்கள் தேசீய முஸ்லிம்களாம். துரோகி முஸ்லிம்கள் என்று அழைத்துக் கொண்டால் மிகவும் பொருத்தமாக இருக்கும்.

ஒரு சில தேசீய முஸ்லிம்கள் ஒதுங்கி நிற்பதினல் பத்து கோடி முஸ்லிம்களின் பரிபூரண கோரிக்கை நிராகரிக்கப்படமாட்டாது. ஜான் அமெரி வில்லியம் ஜாய்ஸ், ஆல்வால் மாஸ்லி போன்ற பிரிட்டிஷ் துரோகிகள் ஜெர்மனியோடு சேர்ந்திருந்தக் காரணத்தால், பிரிட்டிஷ் மக்களின் சுதந்திரத்தை ஜெர்மனி அபகரிக்க முடியவில்லை. இது சரித்திரம் கண்ட உண்மை. தேசீய முஸ்லிம்கள் லீகிற்கு விரோதமாகச் செய்யும் செய்கை சூரிய வெளிச்சத்தின் முன் மினிமினிப் பூச்சியின் ஆர்பாட்டம் போலாகும். என்பதை நாம் அறிவோம். இருந்தபோதிலும் அவர்கள் முஸ்லிம்கள். அவர்கள் தம் தவறை உணர்ந்து நம் வட்டத்தில் வர உரிமைப் பெற்றவர்கள். ஆகையால், அவர்களுக்கு ஓர் வார்த்தை!

தேசீய முஸ்லிம்களே! உங்களை அவ்வாறு அழைப்பதற்கே எனக்கு வெட்கமாக இருக்கிறது. முஸ்லிம்களுக்குள்ளும் பிளவா என்று எண்ணும்போது உங்களைப்பற்றி இரங்க வேண்டி யிருக்கிறது. நீங்கள் ஏன் முஸ்லிம் வட்டத்திலிருந்து விலகி இருக்கிறீர்கள். உங்களை விலக்கி வைக்கவில்லையே! அந்த வழக்கம், பிறப்பில் உயர் ஜாதி என்று பிதற்றித் திரியும் பிராமண சமூகத்திலல்லாது சமத்துவம் அளிக்கும் நம் சமூகத்தில் கிடையாதே? பின் ஏன் ஒதுங்கி நிற்கிறீர்கள்? உங்களுடைய பெயர்களை விளம்பரப்படுத்த வேண்டுமென்றா? உங்களுடைய குறைகள் என்ன? எடுத்து இயம்ப முடியுமா? 10 கோடி முஸ்லிம்களும் ஒரே தலைவரின்கீழ் ஒன்றுபட்டிருக்கும் பொழுது, உங்களுக்கு மட்டும் அது பிடிக்கவில்லை யென்றால் ஆச்சரியமாகத்தா னிருக்கிறது. நீங்கள் மட்டும் அவ்வளவு அறிவு படைத்தவர்கள் என்று நினைத்தால் முஸ்லிம் லீகில் சேர்ந்து உங்களுடைய அறிவின் தீட்சண்யத்தை வெளிப்படுத்துங்கள்! அதுதான் புத்திசாலித்தனம்.

நேற்று காங்கிரசின் கைப்பாவையாக இருந்த முஸ்லிம்கள் தன் தவறை உணர்ந்து இன்று முஸ்லிம் லீகில் சேர உரிமையுண்டு. தவறு ஏற்படுவது இயற்கை, அதைத் திருத்திக் கொள்வது அறிவுடமை. அதைத் திருத்தாமலிருப்பது மடமை. இதை நன்ருக உணரவேண்டும். கஸ்தூரிபாய் நிதிக்கு உங்களைக் காங்கிரசுக்கு இழுத்துச் செல்வதை நாம் அறிவோம். சுயநலத்திற்காக நம் சமூகத்தைக் காட்டிக் கொடுப்பதா? இஸ்லாத்தைப் புறக்கணிப்பதா? எதிர்கால இஸ்லாமிய சந்ததிகளை என்றென்றும் அடிமையாக்கி அல்லலுரச் செய்வதா? ஒரு சில வெள்ளிக் காசுக்காக வேண்டி கடமைப் பாதையிலிருந்து விலகி மடமைப் பாதையில் செல்வதா? வீர சமூதாயத்தில் பிறந்த நாம் கோழைகளாக வாழ்வதா? 800 ஆண்டுகளாக இந்திய நாட்டை ஆண்ட வம்சப் பரம்பரையில்வந்த நாம் ஹிந்துக்களுக்கு அடிமைபாக வாழ்வதா? எந்த உண்மை முஸ்லிமும் இதற்கு இணங்கமாட்டான். சுதந்திரத்தோடு வாழ வேண்டுமென்றே நினைப்பான். அதுதான் இஸ்லாமிய எழுச்சியின் விழிப்புணர்ச்சி. அந்த விழிப்புணர்ச்சியின் மறுமலர்ச்சியே பாகிஸ்தான், இதை நன்ருகச் சிந்திக்கவேண்டும்.

கிலாபத் இயக்க காலத்தில் "இமாமுல் ஹிந்த்'' என்று எல்லோராலும் அழைக்கப்பட்ட ஒரு முஸ்லிம், 'மதகுரு' (?) இன்று ஹிந்து காங்கிரசின் ராஷ்டிரபதி! இந்தியா பூராவும் விமானத்திலே பறக்கிறார்; பிர்லாக்

களின் தயவினால் அரசர்கள் தங்கக்கூடிய ஹோட்டல்களிலே தங்குகிறார். உயர்ந்த ரக சிகரெட்டுகளையே சாப்பிடுகிறார். அரச போஜனமே அருந்துகிறார். இவ்வளவு வசதிகளையும் தியாகம் செய்ய ராஷ்டிரபதிக்கு எப்படி மனம் துணியும்! அதனால்தான் காட்டிக் கொடுக்கும் கருவியாக தம்மை காந்திக் கும்பல் பயன்படுத்துகிறது என்பதை உணர்ந்தாரில்லை. ஆனால், ஆளும் பிரிட்டிஷ் ஏகாதிபத்யம் அதை நன்றாக உணர்ந்துக் கொண்டது. அதனால்தான் முதலில் காந்தியை அழைத்தார்கள் பிரிட்டிஷ் மந்திரிகள். ராஷ்டிரபதி காங்கிரசால் சிருஷ்டிக்கப்பட்ட ஒரு பொம்மை என்று எல்லோருக்கும் தெரியும். முஸ்லிம்கள் உணர்ச்சிப் பெற்றதின் காரணமாக ராஷ்டிரபதியின் குட்டு அம்பலமாகிறது. எந்த நாட்டிலும் துரோகிகள், மீர்ஜாபர்கள், குவிஸ்லிங்கள் இருப்பது இயற்கை. அதே நிலையிலே இன்று ஆஜாத் இந்திய முஸ்லிம்களிடையே இருக்கிறார். அவர் தம் தவறை உணர்ந்து ஆயுள் பரியந்தம் அதற்காக ஆண்டவனை இறைஞ்ச வேண்டிய காலம் வெகு தூரத்திலில்லை.

இந்திய அரசியல் கட்சிகளிலே மிகவும் கட்டுப்பாடான கட்சி முஸ்லிம் லீக்தான். அதில் நீங்கள் சேர்ந்துக் கொண்டு உங்களைப் பலப்படுத்திக் கொள்ளுங்கள். அல்லாஹ் பிச்சைகளையும், ஆஜாத்களையும் நம்புவது மண் குதிரையை நம்பி ஆற்றிலிறங்குவது போலாகும் என்பதை உணருங்கள். இந்த அரிய சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தாமல் நீங்கள் ஒதுங்கி நின்று இஸலாத்திற்கும், இஸ்லாமிய சபையாகிய முஸ்லிம் லீகிற்கும் துரோகம் செய்தால் முடிவு என்னவாகுமென்பதை எம் தலைவர் ஜனாப் ஜின்னாஹ் கூறிய ஓர் வாசகத்தை இங்கு ஞாபகப்படுத்த விரும்புகிறேன். இந்திய தேசீய இராணுவ வீரர்கள் விடுதலை விஷயமாக மத்திய சட்டச் சபையில் பேசுகையில், "என்னுடைய பாகிஸ்தான் இராணுவத்திலுள்ள சோல்ஜர்களானாலும் சரி, உத்தியோகஸ்தர்களானாலும் சரி, அவர்கள் துரோகம் செய்தால் வில்லியம் ஜாய்ஸின் கதியை அடைவார்கள்" என்று காயிதெ ஆஜமவர்கள் குறிப்பிட்டார்கள். உங்கள் விஷயத்திலும் இதை நீங்கள் உணர வேண்டும். நீங்கள் முஸ்லிம்கள் ஒரே ஆண்டவனுக்கும், ஒரே நபிக்கும், ஒரே குர்ஆனுக்கும் கட்டுப்பட்டவர்கள். அதுபோல் ஒரே தலைவருக்கும், ஒரே சபைக்கும், ஒரே இலட்சியத்திற்கும் கட்டுப்பட வேண்டியது அவசியம் ஏற்பட்டிருக்கிறது என்பதை உணருங்கள். உணர்ந்து நம் வட்டத்தில் வந்து சேருங்கள். இதுவே அரிய சந்தர்ப்பமும் கடைசி கட்டமுமாகும்.





# சமூகத்துடன் மோதாதே!

(நாகூர் எம். ஏ. எம். தாவூது மரைக்காயர்)

காட்டு மிராண்டி ஜப்பானியனுடன் கூடிக்கொண்ட ராம்ராஜ்ய பரிபாலனம் நடத்திய மூவர்ணக் கொடி குழாத்தினர்கள் மலாய் நாட்டு முஸ்லிம்களுக்கு குறிப்பாய் மலாய் நாட்டில் வதிந்து வந்த இந்திய முஸ்லிம்களுக்கு இழைத்த இன்னல்களை தமிழ் நாட்டு முஸ்லிம்கள் அறியவும், கூலி குலாம் முஸ்லிம்கள் குணக் கேட்டிலிருந்து விலகவும், அடிவருடி முஸலிம்கள் அறியாமையிலிருந்து நற்கதி யடையவும் வேண்டி, சிங்கப்பூர் கோலாலம்பூர் அன்பர்கள் வரைந்தவி திதங்களில் கண்ட அக்கிரம அநியாய ஆட்சி முறையின் சில சம்பவங்களை தொகுத்து இதே நூருல் இஸ்லாத்தில் ஓர் கட்டுரையாக வரைந்தது நேயர்களுக்கு ஞாபகமிருக்கலாம். அக்கட்டுரையைக் கண்ணுற்ற, பினாங்கிலிருந்து வெளிவரும் தேசிய (ஆரிய) கூலி ஏடான "சேவிகா" எனும் தினசரி பேதமைமதியால், சித்தப் பிரேமையால் நேர்மையற்ற வகையில் மிகக்கேவலமாய் மறுப்பு எழுதியுள்ளதாம் தனது 22-2-46 வெளியீட்டில்! அந்த மறுப்புக்கு "சின்னப்புத்தி படைத்த சின்னச்சாதி' என்ற தலையங்கம் கொடுத்து குறிப்பாக தமிழ் முஸ்லிம்களை ஆஷாட பூதிகள்" "கோழைகள்" "உலுத்தர் கூட்டம்" என்றெல்லாம், தாக்கியுள்ளதாய், சிங்கையிலிருந்து 1-5-46 ல் வெளியான முஸ்லிம் மாத சஞ்சிகையான" பேனா முனை" யின் வாயிலாய் அறிந்து இக்கட்டுரையை வரைய முன் வந்தேன். அழுக்கை அழுக்கைக் கொண்டே போக்க வேண்டும் என்ற நியதிக்கொப்ப எழுத்து கொஞ்சம் விறுவிறுப்பாய் போகும்படியாய் ஏற்பட்டமைக்காக ஆசிரியரும், அன்பர்களும் மன்னிப்பார்களாக!

தமிழ் முஸ்லிம்களான நம்மைச் சின்ன ஜாதி எனக் கூற முற்பட்ட அவ்வண்பன், வேசி மகன், திருடன் என்னும் பொருள் படும் சூத்திரன் என்பதை நான் எடுத்துக் காட்ட வேண்டியதில்லை. நான்காம் ஜாதியில் நின்றும் முளைத்து அடிமையாய், ஏமாளியாய் வாழ்ந்துவரும் ஒரு ஜீவன் சுதந்திரர்களாய் வாழ்ந்து வருபவர்களை சின்ன ஜாதி என்று கூற முன்வந்தது அறியாமையின் உச்சநிலை என்று சொல்லவும் வேண்டுமோ?

முஸ்லிம்களுக்கு ஜாதி அகம்பாவம், உயர்வு தாழ்வில் பிரேமை கிடையாது. எங்களை எந்த ஜாதி என்று யார் கூறினும் பொருட்படுத்தப் போகிறதில்லை. பேச்சுக்குப் பேச்சு ஏச்சுக்கு ஏச்சு என்ற நியதியை கடந்துக் கோணல் புத்தியுடன் குதர்க்கமதியுடன் விதண்டாவாதம் புரியும் நிலையில் எல்லையைக் கடந்து ஏச முற்பட்டால் நாங்களும் எங்களால் இயன்ற வரையில் பார்ப்போம். எல்லா வகையிலும் என்பதை எச்சரிக்கை செய்கின்றேன். எம்முடைய வியாசத்தில் கண்ட மலாயா சம்பவங்கள் தேசீயத்தின் பிறவிக் குணம் போன்று திரித்துக் கூறுவதாய் இருந்தால் அதைத் தக்க ஆதாரத்துடன் மறுக்க வேண்டியதே நேர்மை! அதை விடுத்து குருட்டுத்தனமாய் முரட்டு வாதம் புரிவது முட்டாள்தனம்! தமிழ் முஸ்லிம்களை கண்மூடித்தனமாய்த் தாக்குவதால் மட்டில் திருப்தி அடைந்துவிடப் பார்க்கின்றார் போலும் சேவிகா ஆசிரியர்! முஸ்லிம் என்றால் சகலரும் ஒன்றேதான்! நாட்டையும், பாஷையையும், நிறத்தையும் கொண்டு முஸ்லிம்களை ஹிந்துக்களைப் போல் பல பகுதியாய் பிரித்துவிட இயலாது! முஸ்லிம் என்ற காரணம் பற்றி நீக்ரோ மக்கள் துன்புறுத்தப்படுவார்களேயானால் அகில உலக முஸ்லிம்களின் கவனம் ஆப்பிரிக்கா பக்கம் திருப்பப்படும் என்பதை எடுத்துக் காட்ட ஆசைப்படுகின்றேன். சிங்கப்பூரில் அரப் ஸ்டிரீட்டில் வதியும் அதிகப்படியான தென்னாட்டு முஸ்லிம்களைக் கோழை என மதித்து கொடி கலகத்தைக் கிளப்பிய உன் சமூகம், கொதித்தெழுந்த இஸ்லாம் இன ஜுவாலையின் முன்புறம் முதுகுகாட்டி ஓடியதை சேவிகா ஆசிரியர் அறியார் போலும்! தமிழ் முஸ்லிம்களை தாக்குவதாய் நடித்து மலாய் முஸ்லிம்களிடமும், மற்ற முஸ்லிம்களிடமும் நல்லப் பிள்ளையாய் நடந்து கொள்ளலாம் என மனப்பால் குடிக்காதே! இந்த விஷயத்தை அவர்களுக்கு எடுத்துக் காட்டினால் உன் சமூகச் சதி என்னாகும்? போஸா இருக்கின்றார் உன்னை பாதுகாக்க பாரபட்ச மனப்பான்மையுடன்? லட்சுமியா இருக்கின்றார் உன்னை இரட்சிக்க? அந்த ஆட்டமெல்லாம் அடங்கி

விட்ட காலம் ஐயனே! துள்ளிய நீங்கள் தூங்கிவிழும் காலம் வயிற்றுப் பிழைப்புக்கு குடிப் புகுந்துள்ள நாடு முஸ்லிம்களுடையது என்பது ஞாபகமிருக்கட்டும்! அம்மக்களுக்கு நீயும், உன் சமூகமும், எதிரிகள், நாங்கள் முஸ்லிம்—சகோதரர்கள் என்பதும் ஞாபகமிருக்கட்டும்!

மிருகக் குணம் படைத்த மிருக ஜாதியினின்றும் முளைத்த உன்னையும், உன் சமூகத்தையும் சின்னப் புத்தி படைத்த சின்ன ஜாதி என்று கூறினால் அறிவுலகம் எற்கும்! என் கூறுகிறேன் என்றால், உன் மதம் ஹிந்து மதம் அல்லவா? ஹிந்து என்ற பதம் பாரசீகநாட்டார் அளித்தது. அதன் பொருள் நாகரீகத் தன்மையில்லாதவர்கள், கடவுள் நம்பிக்கையற்றவர்கள், திருடர்கள் என்பன அதிலும் ஹிந்து மதத்தில் பிரிக்கப்பட்ட நான்காம் பிரிவைச சேர்ந்த சூத்திரரின் (வேசி மகன்) ஆகிய நீ பிறரைப் பழிப்பது வெட்கக்கேடல்லவா? எட்டில் எழுதி எமாற்றிவிடலாம், பயங் காட்டிவிடலாம் எனப் பகல் கனவு காணும் காலமில்லை, இது என்பது ஞாபகமிருககட்டும்!

ஜப்பானின் பக்கப்பலம் கொண்டு, நெடுநாளைய எண்ணத்தை நிறைவேற்ற எவ்வளவோ இடுக்கண்கள், இடையூறுகள், பல பரீட்சைகள் கூட செய்து பார்த்தீங்களே! எம் சகோதர முஸ்லிம்கள் பயந்தார்களா? சளைத்தார்களா? அஞ்சினார்களா? பதுங்கினார்களா? ஓடி ஒளிந்தார்களா? ஜப்பானியரின் மண்ணைக் கவ்வி, போஸ் போன இடம் தெரியாத நிலைமையானதே! அப்போது பழிக்குப் பழி வாங்க நினைத்தார்களா? இல்லை! இக்குணப் பண்புகள் கோழைகளுக்குரியது! முஸ்லிம்களிடம் காண இயலாது!

பத்திரிகை ஆசிரியர்கள் குடியர்கள் போலும், வெறியர்கள் போலும், சித்பிரேமைக் கொண்டவர்கள் போலும், பேசுவதும், பிறுத்துவதும் பேதமை, பொய் என்றால் ஆதாரத்துடன் நிரூபிக்க வேண்டியதுதான் பெருந்தன்மை! முடியாவிடின் வாயை மூடிக் கொண்டு மூலைப் பார்த்து முடங்கிக் கிடக்க வேண்டியதுதான். அதை விடுத்து தமிழ் முஸ்லிம், மலாய் முஸ்லிம் என்ற பாகுபாட்டை மனத்தில் நினைத்துக் கொண்டு, ஹிந்து சமூகம் போன்றதே இஸ்லாமிய சமூகமும் என மனப்பால் குடித்து, மடத்தனத்துடன் சமூகத்துடன் மோதாதே. இஸ்லாமிய உணர்ச்சி தீயில் வெந்து சாம்பலாவாய்! சேவிகா என்னும் பெயருக்கேற்ப மக்கள் சமூக முன்னேற்றத்துக்கான சேவையில் ஈடுபடு!

ஜேய் பாகிஸ்தான்!!







# "ஏழையின் துயரம்"

[எம். எஸ். சுப்ரமணியன்]

1

உக்கிரமான வெய்யில் காய்ந்து கொண்டிருந்தது. கடந்த மூன்று வருஷங்களாக மழையே இல்லை. "இவ்வருஷமாவது மழை பொழியும்" என்று குடியானவர்கள் எதிர்பார்த்திருந்தார்கள். அக் கிராமத்திலிருந்த பல மரங்கள் பட்டுப்போய்விட்டன. பச்சைப் பசேலென்று அழகிய காட்சியளித்துக் கொண்டிருந்த மலர்ச் செடி கொடிகள், புதர்கள் யாவும் உலர்ந்து வெறும் கொம்புகளாக நின்றன. எரி, குளம், குட்டைகள் யாவும் வறண்டு பூமி பல வெடிப்புகளுடன் காட்சியளித்தது.

ஆங்காங்கு சில இடங்களில் குடியானவர்கள் பயிரிட்டு கிணறுகளிலிருந்து நீர் பாய்ச்சிக்கொண்டிருந்தனர். பயிர்கள் வானத்தைப் பார்த்து எங்கிக் கொண்டிருந்தன. ஆடுமாடுகள் நிலங்களில் மேய்வதற்குப் புல்லின்றி எக்கத்துடன் நின்றுக் கொண்டிருந்தன.

கன்றுக் குட்டிகள் பாலின்றி பாதவிக்கும்படி நேர்ந்துவிட்டது. தாய்ப் பசுக்கள் தீனியில்லாமல் வாடிக் கிடந்தன. அவைகளின் அன்புக் களஞ்சியமாகிய கன்றுகள் தமது தாயின் வற்றிய மடிகளைத் தம் வாயினால் பற்றியிழுத்து அதினின்றும் போதிய பால் வாராமை கண்டு, தாய் முகம் பார்த்து "அம்மா" என்று கதறும்போது தாய்ப் பசுக்கள் தம் சேய்களின் துயரம் கண்டு, கண்களில் நீரை வடித்து அவைகளைத் தம் நாவினால் நக்கிக் கொடுத்தன.

ஏழைகளை வாட்டி வதைத்து—அவர்களின் இரத்தத்தைப் பிழிந்து—அவர்களால்—அவர்கள் உழைப்பினால் பணக்காரர்களான முதலாளிகள் நன்றாகத் தின்று கொழுத்திருந்தார்கள். முதலாளிகளுக்காக ஓய்வின்றி உழைத்த ஏழைகள், பட்டினிக் கிடந்து எலும்புந் தோலுமாக இளைத்து, தமது வாழ்க்கையின் அஸ்தமனத்தை எதிர்பார்த்திருந்தார்கள்.

பலவகைப் பலகாரங்களுடன் சாதத்தையும் கொண்டு தன் வயிற்றை நிறப்பி நகர முடியாமல் கிடக்கிறான் பணக்கார முதலாளி. பலகாரங்கள் என்ற பெயரைக்கூட கேள்விப்படாமல் பட்டினியாகவே கிடந்து வயிறு ஒட்டி பலஹீனத்தினால் நகர முடியாமல் கிடக்கிறான் ஏழைத் தொழிலாளி.

புளியேப்பம் விட்டவண்ணம் அஜீரணத்துடன் இருக்கும் பணக்காரன், இஞ்சி முரபா முதலிய ஜீரண சக்தியை அளிக்கும் மருந்துகளைத் தேடுகிறான். பசியேப்பம் விட்டுக் கொண்டு பட்டினி கிடக்கும் ஏழை, அன்னத்தை தேடுகிறான்.

பணம் சேரச் சேர சந்தோஷ மிகுதியினால் யானைப்போல் பருக்கிறான் முதலாளி. போதிய பணமில்லாமல் கடனாளியாகி பூனைபோல் பதுங்குகிறான் தொழிலாளி.

பணம் பணக்காரனிடம் சேர்ந்து அவனை கொழுக்க வைக்கிறது. பசிப்பிணி ஏழையிடம் சேர்ந்து அவனை வாட்டி வதைக்கிறது.

கடவுள் என்று ஒருவன் உண்டு என்றால், அவன் பணக்காரர்களுக்காகவே இருக்கிறானே ஒழிய, ஏழைகளை அவன் ஏறெடுத்து பார்ப்பதில்லை.

பொன்னன் அக்கிராமத்தின் பெரிய பணக்காரரும், கிராமாதிகாரியுமான காளிங்கராய முதலியாரின் பண்ணையாள். மூன்று தலைமுறைகளாக பொன்னனுடைய குடும்பமே முதலியார் வீட்டுப் பண்ணையாளாக உழைத்து வந்திருக்கிறது.

ஆதிதிராவிட வகுப்பைச் சேர்ந்தவன் பொன்னன். கிராமத்தின் கீழண்டைப் புறத்திலுள்ள சேரியிலிருந்தது அவனுடைய குடிசை. அவன் குலத்தில் தாழ்ந்தவனாக இருந்தாலும் குணத்தில் உயர்ந்தவனாக இருந்தான். தன் எஜமானனுக்கு கீழ்ப்படிந்து நடப்பதில் அவனுக்கு நிகரானவர்கள் அக் கிராமத்திலேயே இல்லை.

பொன்னன் தன் சிறு வயதிலேயே முதலியாரின் அடிமையானான். அவருக்கு மட்டுமல்ல, அவர் வீட்டிலிருக்கும் சிறு குழந்தை முதல்—சாகப் பந்து சுடுகாட்டை முறைத்துக் கொண்டிருக்கும் கிழவி வரையிலும் எல்லாருக்குமே பொன்னன் அடிமைதான்.

“அது அவன் விதி”—“பிரமன் அவன் தலையில் அப்படி எழுதிவிட்டான்......” ‘அவன் தலை எழுத்து அப்படி’ என்றெல்லாம் சிலர் சொல்லுகிறார்களே அதுபோல, பிரமதேவன் பொன்னனுடைய தலையில் “ஏ; பொன்னா! நீ சிறு வயதிலிருந்து காளிங்கராய முதலியாரின் பண்ணையாளாகவே உழைத்து மாள வேண்டும்” என்று வேறு ஒருவருக்கும் புரியாத தன் பாஷையில் எழுதிவிட்டான் போலும்!

பொன்னனுக்கு இப்போது 37 வயது ஆகிறது. அவனுடைய தகப்பன், முதலியார் வீட்டுப் பண்ணையாளாக இருந்தபோதே தானும் அடிமையில் மூழ்கினான். பொன்னனுடைய 20-ஆவது வயதில் அவனது தகப்பன் காலமானான். அதற்குப் பிறகுதான் பொன்னனுக்கு **பண்ணையாள்** என்ற பட்டம் கிடைத்தது. தகப்பன் தனக்கு சம்பாதித்து வைத்த பண்ணையாள் என்னும் ஆஸ்தியை, அவன் மிகவும் ஜாக்கிரதையாகப் பாதுகாத்து வந்தான். அவன் தன் சிறு வயதிலிருந்தே முதலியார் வீட்டில் நல்ல அனுபவம் பெற்றவன். பண்ணையாள் என்ற உழைப்பின் முறையில் மாத்திரம் அவனுக்கு 17 வருஷ அனுபவம் இருந்தது.

முதலியாருக்குச் சொந்தமான நிலங்களை உழுது பரம்படித்தல், விதைத்து நீர் பாய்ச்சி அவறுடை செய்தல், தோட்டங்களைக் காவல் புரிதல், வண்டி போட்டுதல் முதலிய பல வேலைகளைச சோம்பலின்றி செய்து வருவான் பொன்னன்.

கடந்த மூன்று வருஷங்களாக பொன்னனுக்கு கஷ்டம் அதிகம் மழை பொழியவில்லை யாதலால் ஏரி, குளங்களில் நீர் வற்றிவிட்டது. கிணறுகளின் வெகு ஆழமான பாகத்தில் கொஞ்சம் தண்ணீர் இருந்தது. அவைகளிலிருந்துதான் பொன்னன் ஏற்றம் போட்டு பயிர்களுக்கு நீர் பாய்ச்சிக் கொண்டிருந்தான். கடந்த மூன்று வருஷங்களாக நல்ல விளைவு இல்லாமையால் தனக்கு வரும்படி குறைந்துவிட்டது. வீட்டில் அரிசியில்லாமல் இடைபிடையே பட்டினி கிடக்கவேண்டியதாயிற்று.

பொன்னனுடைய மகன் திண்ணைப் பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டு இருக்கிறான் உபாத்தியாயருக்கு 5 மாதச் சம்பளம் பாக்கி யிருக்கிறது கடந்த வருஷம் வீட்டுச் செலவிற்காக ஒருவனிடம் அடகு வைத்திருக்கும் தன் மனைவியின் நகைக்கு வட்டி செலுத்தி 8 மாதங்களாகின்றன. இதுவும் தவிர பொன்னன் மற்றும் சில இடங்களில் கடன்பட்டிருந்தான். ஆதலால், கடன்காரர்கள் அவனை பிய்த்துக் கொண்டிருந்தார்கள்.

அவனது மனைவி கர்ப்பவதியாக இருக்கிறாள். அவளுடைய பிரசவ காலமும் நெருங்கிக் கொண்டிருக்கிறது. அவள் பிரசவித்தப் பின் அவளது தேக நலன்களுக்காக பணம் வேண்டியிருக்கிறது. இச்சமயத்தில் அவனுக்கு உதவி செய்வோர் யார்?

“வரப்போவது ஐப்பசி, கார்த்திகை மாதங்கள். கடந்த மூன்று வருடங்களும் மழை இல்லாததால், இவ்வருஷம் பலத்த மழை பொழியும்” என்று கிராம மக்கள் பேசிக் கொண்டார்கள். வரப்போகும் மழைக்காலத்தைக் குறித்து கிராமத்திலிருக்கும் சொந்த நிலங்களையுடைய பணக்காரர்களும், வாரத்திற்குப் பயிரிடும் சில குடியானவர்களும் சந்தோஷப்பட்டுக் கொண்டிருந்தார்கள்

எந்தக் காலத்திலும் வறுமைக் கடலிலேயே மூழ்கி—உயர்ந்த ஜாதி என்று தம்மைச் சொல்லிக் கொள்ளும் அஞ்ஞானிகளுக்கு, உழைத்து அலுத்து குடிசைகளை அமைத்துக் கொண்டு வாழ்ந்து வரும் ஏழை உழைப்பாளிகளுக்கு, வரப்போகும் அந்த





மழைக் காலம் பெரிய பயங்கரத்தை அளித்துக் கொண்டிருந்தது.

பொன்னன் ஒரு சலிப்பற்ற உழைப்பாளி. அவனுடைய மனப் பிரதேசத்தில் பெரும் புயல் அடித்துக் கொண்டிருந்தது. வரப்போகும் காரகாலம் இப்போதே அவனுடைய மனதில் பேரிடியையும், பெரு மழையையும் உண்டாக்கிவிட்டது. என் செய்வான் பாவம்! அவனுடைய குடிசையோ சிறியது. பனைவோலையினால் வேயப்பட்ட அதன் கூரை முழுதும் பெரிய பெரிய துவாரங்கள் நிறைந்திருந்தன. கொம்புகளும் ஓலைகளும் கரையான்களால் அரிக்கப்பட்டுக் கிடந்தன. மழை வந்துவிட்டால் வீடு முழுவதும் ஒரே சேறும் தண்ணீருமாகிவிடும். அதன் பின் பொன்னனுடைய குடும்பத்திற்கு தங்க இடமேது?

ஃ ஃ ஃ

## 2

அது ஒரு பெரிய கிராமம். காளிங்கராய முதலியார் அதற்கு அதிகாரி. அந்தப் பெரிய கிராமத்தைச் சேர்ந்து பல குக்கிராமங்களும் இருந்தன. 75 மைல் தூரத்தில் ஒரு நகரமும் இருக்கிறது.

முதலியார் தன் பெயருக்குத் தக்க குணமும், உருவமும் உடையவர். அவரது கிராமத்திலும் அதைச் சார்ந்த பல சிறு கிராமங்களிலும் அவருடைய பெயர், “காளி” என்றே வழங்கி வந்தது.

காளி ஒரு கொலைப் பாதகன். மனிதப் பிசாசு. அம்மை வடுக்கள் நிறைந்த விகாரமான முகம். பயங்கரமான சிவந்த விழிகள். புலி வாயிலகப்பட்ட ஆட்டைப்போல இந்தக் காளியிடம் அகப்பட்ட ஆட்கள் தப்புவதில்லை. ஏழு கழுதைகள் சேர்ந்து ஒரே சமயத்தில் கத்துவது போலிருக்கும் அவனது கோத்தியான குரல்.

காளி எச்சில் கையினால்கூட காக்கையை ஓட்டமாட்டான். தன் கையிலுள்ள ஒரு சாதம் கீழே விழுந்தால் அதை காக்கை சாப்பிட்டுவிடுமே என்ற அவ்வளவு உதாரகுணம் படைத்த கருமி பிச்சைக்காரர்கள் யாராவது வந்து பிச்சை கேட்டால் சில புண்ணியவான்கள், “சீச்சீ! நாயே போ!” என்று சீறி விழுந்து விரட்டுகிறார்களே அப்படிப்பட்டவனல்ல காளி. பிச்சைக்காரனை அடித்துத் துரத்தி விட்டுத்தான் மறு வேலை பார்ப்பான்.

காளிக்கு அக்கிராமத்தில் 80 வேலி நஞ்சை நிலங்களும், 60 வேலி புஞ்சை நிலங்களும், தென்னந் தோப்புகள் நான்கும், மாந் தோப்புகள் இரண்டும் இருந்தன. நகரத்தில் நெல்லு மண்டி ஒன்றும், பெரிய ஜவுளிக் கடை ஒன்றும் வைத்திருந்தான்.

அக்கிராமத்திற்கு அவனே சர்வாதிகாரி. தனக்கு நிகர் இவ்வுலகில் ஒருவனுமே இல்லை என்ற கர்வம் பிடித்தவன் காளி. கிராமத்திலிருந்த எல்லோருமே அவனுக்குப் பயப்படுவார்கள். அயோக்கியத்தனத்தின் எல்லையையும் கடந்துவிட்டவன் காளி. மறந்துகூட ஒரு மெய் சொல்லமாட்டான். தேளுக்கு விஷம் கொடுக்கிலும், பாம்புக்கு விஷம் பல்லிலும் இருக்கும். ஆனால், காளிக்கு சரீரம் முழுவதும் இருந்தது விஷம்.

அந்தப் பிராந்தியத்தில் அவனே சிறந்த பணக்காரனாக இருந்தும் அவன் மேலும் மேலும் பணம் சேர்ப்பதிலேயே ஈடுபட்டிருந்தான். அப்பணப் பேய்க்கு இன்னும் அந்த ஆசை குறையவில்லை. பிறரை மோசம் செய்வதில் காளி பலே கைகாரப் பேர்வழி. தன்னிடம் அடகு வைக்கப்பட்டிருக்கும் குடியானவர்களின் நிலத்திற்கு வட்டிப் போட்டு, வட்டிக்குமேல் ஒரு வட்டிபோட்டு அப்படியே எப்பம் விட்டுவிடுவான். அடகு வைக்கப்பட்டிருக்கும் நகைகளுக்கும் அதே கதிதான்.

காளியினுடைய மனைவி **சரஸ்வதி** மிகவும் நல்லவள். பிறர் கஷ்டம் காணச் சகியாத பேதை. நல்ல குடும்பத்தில் பிறந்து வளர்ந்திருந்தும் அவளது துரதிர்ஷ்டம் இந்த மாபாவி காளிக்கு வந்து வாழ்க்கைப்பட வேண்டியதாயிற்று தன் கணவனுடைய திருட்டுத்தனமான நடத்தையை அவள் வெறுப்பாள். காளியினுடைய நடத்தை மிகவும் மோசமானது என்பதை அவள் உணர்ந்திருந்தும் அவனிடம் தனக்கிருந்த அச்சத்தினால் அதை அவள் திருத்த முயலவில்லை.

சரஸ்வதி எழில் மிகுந்தவள். அவளது அழகும், அறிவும் வளர்ச்சி யடைந்திருந்தது. அவளுடைய சௌந்தரியம் காளியின் பாழடைந்த கண்களுக்கு விகாரமாகவே தோன்றியது. இது அவனுடைய கண்களின் கோளாறோ அல்லது மனதின் கோளாறோ? அவன் தன் மனைவியை மறந்து பிற பெண்களின் மீதே கண்ணோட்டமாக இருந்தான். ரோஜா மலரைக் கையில் வைத்துக்கொண்டு ஊமத்தன் புஷ்பத்திற்காக அலைந்தான். அறிவைப் பெருக்கும் ஒளி வீட்டிலிருக்க, அறிவைப் போக்கும் அந்தகாரத்தில் மூழ்க ஆசை கொண்டு திரிந்தான்.

(தொடரும்)



# "விதியிலும் பாழும் விதி"

(விருதுநகர் ந. இராமசாமி)

இண்டோ சிலோன் எக்ஸ்பிரஸ் ஒரு பெருமூச்சுடன் புதுக்கோட்டை ஸ்டேஷனில் வந்து நின்றது! தயாராய் நின்றிருந்தப் பிரயாணிகள் நான் முந்தி, நீ முந்தி என்று முண்டியடித்துக் கொண்டு வண்டிகளில் ஏற ஆரம்பித்தனர். இவற்றை எல்லாம் இரண்டாவது வகுப்பு வண்டி ஒன்றில் உட்கார்ந்துக் கொண்டிருந்த சந்திரசேகரன் வேடிக்கையாகப் பார்த்துக் கொண்டிருந்தான்.

முதல் மணி அடித்தாயிற்று! பிரயாணிகளிடையே மிகுந்த பரபரப்புக் காணப்பட்டது. அன்று வண்டித் தொடரில் ஏகக் கூட்டம்! தங்கள், தங்கள் மூட்டை முடிச்சுகளை ஜன்னல் வழியாக வண்டிக்குள் எறிந்துவிட்டு அவசர அவசரமாக ஏறிக்கொண்டு இடம் பார்த்தனர்.

இவர்களில் அப்பொழுதுதான் பிளாட்பாரத்தில் நுழைந்த ஒரு இளம் யுவதியின் பக்கம் இவன் கவனம் சென்றது.

போர்ட்டர் பெட்டி படுக்கைகளுடன் பின் தொடர பரபரப்புடன் வண்டித் தொடரின் ஆரம்பத்திலிருந்து கடைசி வரை ஒவ்வொரு வண்டியாகப் பார்த்துக் கொண்டு நடந்தாள். ஒரு வண்டியிலாவது இடமில்லை. அவள் மறுபடியும் திரும்பி வருவதற்குள் இரண்டாவது மணியும் அடித்து விட்டது! கார்டும் பச்சைக் கொடியையும், விசிலையும் கையிலெடுத்து விட்டார்! அவள் ஒன்றும் தோன்றாமல் விழித்துக்கொண்டு வேகமாக நடந்தாள்! இதைப் பார்த்த சந்திரசேகரன் இரக்கமடைந்து கையைத் தட்டி, "இதோ இங்கே இடமிருக்கிறது! சீக்கிரம் வாருங்கள்!" என்று கத்தினான்.

அவள் பரபரப்புடன் வண்டியினருகில் ஓடி வந்தாள்! கார்டும் விசில் கொடுத்தார்! அவள் முகத்தில் கலவரம் காணப்பட்டது, "தாங்கள் இஷ்டப்பட்டால் தங்கள் கையைப் பிடித்து ஜன்னல் மூலமாகவே தூக்கிக்கொள்ளுகிறேன்" என்றான். அவளும் அவசரத்தில் தன் கையை நீட்டினாள். அவளை அப்படியே கைத்தாங்களாகத் தூக்கி வண்டிக்குள் விட்டான். பெட்டிப் படுக்கைகளைப் போர்ட்டரிடமிருந்து பிடுங்கி வண்டிக்குள் போட்டுவிட்டு ஒரு நான்கணாவை எடுத்து அவன் முன் விட்டெறிந்தான்! வண்டியும் ஒரு விசில் கொடுத்துவிட்டு புறப்பட்டுவிட்டது.

அவள் தன் முகத்திலரும்பிய வியர்வையைத் துடைத்துக் கொண்டு பெட்டியையும், படுக்கையையும் ஒழுங்காக எடுத்து வைத்தாள்.

"உங்களுக்கு ரொம்ப வந்தனம்! அவசரத்தில் இந்த வண்டி காலியாய் இருப்பதை நான் பார்க்காமல் போனேன்! இன்று நீங்களில்லாவிட்டால் எனக்கு வண்டி கிடைத்திருக்காது!" என்றாள்.

"நான் என்ன பிரமாதமான காரியம் செய்துவிட்டேன்!" என்று சொல்லிச் சிரித்துக் கொண்டான் சந்திரசேகரன். அவள் பெட்டியைத் திறந்து ஒரு ஆல்பத்தையும், ஒரு பிஸ்கட் பாக்கெட்டையும் கீழே எடுத்து வைத்தாள்.

"அது என்ன புஸ்தகம்!" என்று கேட்டான் சந்திரசேகரன்.

"புஸ்தகமில்லை! ஆல்பம்" என்று அதை எடுத்து அவனிடம் கொடுத்தாள். அவன் அதை வாங்கிப் புரட்டினான். முதலில் அவளது போட்டோ வைக்கப்பட்டிருந்தது. கீழே, "மிஸ் மனோன்மணி" என்று ஆங்கிலத்தில் வரையப் பெற்றிருந்தது. அது அவளது பெயர் என்று தெரிந்து கொண்டான். ஒவ்வொன்றாக அலட்சியமாகப் பார்த்துக் கொண்டிருந்த அவன் கண்கள் ஒரு இடத்தில் திடுக்கிட்டு நின்றன! அது ஒரு குரூப் போட்டோ.

"இது யார்?" என்றவாறு அவளைச் சந்தேகத்துடன் பார்த்தான். அவள் அதைப் பார்த்துவிட்டு, "இதோ இருப்பது என் தகப்பனார்! அது என் அத்திம்பேர், இது எங்கம்மாவும், அத்தையும். அத்தைக்குப் பக்கத்திலிருப்பது நான், என் கையைப் பிடித்துக் கொண்டிருப்பது என் அத்தான். சிறு பிராயத்தில் எடுத்த போட்டோ இது!" என்றாள். சந்திரசேகரன் அதிக ஆச்சரியமடைந்து "உங்கள் அப்பாவின் பெயர்" என்னவென்று கேட்டான். அதற்கு "விஸ்வநாதய்யர்" என்று சொன்னாள்.



"குபேரா பாங்கில் மானேஜிங் டைரக்டராய் இருந்தவர்தானே?"

"ஆமாம்! நீங்கள்......" என்று இழுத்துக் கொண்டே அவனைப் பார்த்தாள்.

"அவர் என் சொந்த மாமா அல்லவா! நீ என் மாமாவின் பெண்! நான் உன் அத்தான் சந்திரசேகரனல்லவா!" என்றான்.

"அவள் ஆனந்தத்திற்கும், வியப்புக்கும் அளவில்லை" அத்தான்! என்று அவன் கைகளைப் பிடித்து கொண்டாள் மனோன்மணி.

'மனோன்மணி! நாமிருவரும் சிறு வயதிலேயே பிரிக்கப்பட்டோம்! மாமா குடும்பத்துடன் பர்மா சென்ற பிறகு இன்றுதான் நான் உன்னைப் பார்க்கிறேன். நீங்கள் இந்தியாவிற்கு எப்பொழுது திரும்பி வந்தீர்கள்! மாமா எல்லோரும் எங்கிருக்கிறார்கள்? நீங்கள் புதுக்கோட்டைக்கு ஏன் வந்தாய்?" என்று கேள்விகளை ஒரே மூச்சில் கேட்டான்.

"இப்பொழுதுதான் நான் இந்தியாவுக்கு வந்து ஒரு வாரமாகிறது நாங்கள் சென்னையில் இருக்கிறோம்! என் சிநேகிதி பிடிவாதமாக என்னைத் தன்னுடன் சொந்த ஊருக்கு வந்து இரண்டு நாளாவது இருக்கவேண்டுமென்று இழுத்துக் கொண்டு வந்துவிட்டாள் நான் அவளிடம் விடை பெற்றுக் கொண்டு ஊருக்குப் புறப்படுவதற்குள் போதும் போதுமென்றாகி விட்டது. அத்தை அத்திம்பேரெல்லாம் இப்பொழுது எங்கே இருக்கிறார்கள் அத்தான்!" என்று ஆவல் மிகுதியுடன் கேட்டாள்.

"மானாமதுரையில் இருக்கிறார்கள்! நான் ஒரு படத்தில் நடிப்பதற்காக சென்னைக்குப் போகிறேன்! உனக்குக் கலியாணம்......"

"உங்களுக்குத் தெரியாமல் நடந்துவிடுமா என்ன?"

"மனோன்மணி! நீ இப்பொழுது எவ்வளவு அழகாக இருக்கிறாய் தெரியுமா? பத்து வருஷத்துக்கு முன் பாவாடையுடன் காட்சியளித்த மனோன்மணிக்கும், இந்த மனோன்மணிக்கும் எவ்வளவு வித்தியாசம்?

"நீங்கள் கூடத்தான் எவ்வளவு அழகாக இருக்கிறீர்கள்! பர்மாவிற்கு மட்டும் நீங்கள் இப்பொழுது போனீர்களானால் அந்தப் பெண்கள் உங்களை அப்படியே கடித்து தின்று விடுவார்கள்! அவ்வளவுஅழகு நீங்கள்.

"போக்கிரிப் பெண்ணே! என்னை நீ இங்கே தவிக்க விட்டுவிட்டுப் பர்மாவுக்கு ஓடினாயல்லவா! இரு சொல்கிறேன்" என்று அவளைப் பிடித்திழுத்தான்.

"உஸ்! விடுங்கள். யாராவது பார்த்துடப் போறா! இது சினிமாயில்லை!

"ஏன்! இதுவும் ஒரு பட ஷூட்டிங் என்றே வைத்துக் கொள்ளேன்.

"என்ன! அப்படியானால் உங்கள் அன்பும் ஷூட்டிங் முடிந்து ஸ்டுடியோவை விட்டு வெளியில் வந்து விடுவது மாதிரிதானோ!" என்று குத்தலாகக் கேட்டு அவன் கன்னத்தில் செல்லமாக ஒரு குத்து குத்தினாள்.

"அது ஒரு காட்சியின் அளவு! இந்த ஷூட்டிங்கிற்கு அளவே கிடையாது!" என்று மாற்றினான்! அது தவறி வாயில்வந்தது என்று அவர்கள் நினைத்தார்கள். ஆனால் அது விதியின் அஸ்திவாரம் என்பதை அறியவில்லை அவர்கள்.

பிறகு பலவிதமாகச் சம்பாஷித்துக் கொண்டே பிஸ்கட்டை காலி செய்துவிட்டு மணி பத்து ஆவதைக்கண்டு காலையில் பேசிக்கொள்ளலாம் என்று படுத்துக் கொண்டார்கள். அந்த இரண்டாவது வகுப்பு வண்டியில் தற்செயலாக வேறு எவரும் இல்லாதிருந்தது அவர்கள் விஷமங்களுக்கு சௌகரியமாயிருந்தது! அவ்விருவர் மனத்திலும் பலவித இன்பக் கோட்டைகள் எழும்பிக்கொண்டிருந்தன! காதலனும், காதலியுமாகப்போய் விஸ்வநாதய்யரை திகைக்க வைக்கலாம் என்ற எண்ணம் அவர்களுக்கு! குழந்தையிலிருந்தே இருவரும் அதிகப் பாசமுடையவர்கள்! அவர்களை தம்பதிகளாக்கிவிட வேண்டும் என்பதற்காகவே விஸ்வநாதய்யர் தாய் நாடு திரும்பினார்! ஆனால், மனிதன் எண்ணுவது எல்லாமே நடக்கிறதா! காலையை எதிர்பார்த்து தூங்கிக் கொண்டிருந்த அவர்கள் 'விதி'யின் விசித்திரத்தை அறிந்தவர்களன்று! 'விதி' என்ன செய்யக் காத்திருக்கிறது என்பதைப் பாவம் அவர்களால் எப்படித் தெரிந்துக் கொள்ள முடியும்!

நடு நிசி! 'திடும்பிரவேசமாக மட, மட' என்ற பேரிடி போன்ற சப்தம். அந்தோ! இண்டோ சிலோன் எக்ஸ்பிரஸ் கவிழ்ந்து விட்டது! பல கூக்குரல்கள்! பரிதாபகர

மான கடைசிக் கதறல்கள்! அடப் பாழும் விதியே!

மறுநாள் காலையில் விபத்து நடந்த இடத்திற்கு ஏராளமான போலீஸார்களும் உத்தியோகஸ்தர்களும் வந்தார்கள். வண்டிப் பலகைகளினுல் நசுங்குண்டு கிடந்தவர்களையும், இறந்தவர்களையம் எடுத்துக் கொண்டுவரும் பொழுது ஒரு இளம் தம்பதிகள் அணைத்தப்படியே பலகை ஒன்றினடியில் கிடப்பதைக் கண்டு எடுத்தார்கள். ஆமாம்! சந்திரசேகரனும், மனோன்மணியும்தான் அச்சவங்கள்! எல்லோரும் அவர்களைப் பார்த்துக் கண்ணீர் விட்டனர்! ஒரே நாளில் சந்திக்க வைத்து அதே இரவில் அவர்களது துரதிர்ஷ்டசாலிகளாக்கியது இப்பாழும் 'விதி' தானே! இவர்கள் முடிவு இப்படி என்று 'விதி' இருக்கிறது! அதைத் தடுக்க வல்லவர் யார்?

அதோ! நான்கு ஜீவன்கள். இத்துர்பாக்கியசாலிகளின் பெற்ரோர்கள் கதறி அழுவது வானுலகிற்கு கைக்கோர்த்துச் செல்லும் சந்திரசேகரனுக்கும், மனோன்மணிக்கும் கேட்கவா போகிறது! அவர்கள்தான் உன்னத புனித உலகில் தம்பதிகளாக வாழப்போய் விட்டார்களே! 'விதி' பத்திர சோகத்தால் கதறிப் புலம்பும் நான்கு ஆத்மாக்களைப் பார்த்து ஏளனச் சிரிப்பச் சிரித்தது. அடப் பாழும் 'விதி'யே! உனது ஆனந்தம் இது தானே! "விதியாலும் பாழும் விதி".

(முற்றிற்று).

◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇



◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇



(4)

# ஹஸன் பின் ஸப்பாஹ் அல்லது ஆகாகான் கொள்கை

மேலும் அதிக கண்ணியமான அதிகாய் தன்பால் இருக்கும்படிச் செய்தார் லீபா. கலீபா வென்பவர் இங்கனம் நடந்து அச்சஹவிலிந்த பெரிய உத்தியோகஸ்தர்களின் மனங்களை உறுத்திற்று. அவர் ள் பொருமைக் கொண்டனர். அரசாங்கத்தின் சேனுதிபதியாய் விளங்கிய பத்ர் ஜமாலீ என்பவர் ஹஸனைக் கொன்றுவிட வேண்டுமென்றே தயாராகிவிட்டார். எனினும், சமயம் பார்த்து ஹஸனை சில ஆங்கிலேயர்களுடன் ஒரு கப்பலில் கொண்டு போய் ஏற்றிவிட்டார். இம்மரக்கலம் அது சமயமே புறப்படத் தயாராக நின்றது. ஹஸன் எவ்வளவோ முயற்சித்தும் விடுதலைப்பெற முடியவில்லை. எதிர்பாரா வண்ணம் சமுத்திரத்தில் புயல் கிளம்பிற்று. அதற்கிலக்கான இம்மரக்கலம் திசைத் தவறிப் போயிற்று. அத்துடனில்லாமல் புயலின் மத்தியில் சிக்குண்ட இம்மரக்கலத்திலுள்ளோர் இனி பிழைப்பது முடியாதெனத் தீர்மானித்து விட்டனர். இப்புயல் ஹஸனுக்கு உதவியாகவே வந்ததென்று கூறலாம். மரக்கலத்திலுள்ள ஒவ்வொருவரும் ஒவ்வொரு நிமிடமும், தாங்கள் மூழ்கிப்போகத் தயாராகிக் கொண்டிருந்தனர். இந்நிலையில் அவர்களெல்லாம் சுயநிலை யற்றவர்களாய் நின்றனர். ஹஸனுடைய விஷயமோ அவ்வாறில்லை. அவர் மன அமைதியுடன் நிம்மதியாய் யிருந்தார். அவரொன்றும் நடுக்கமோ, திடுக்கமோ, கலக்கமோ அற்றவராய்க் காணப்பட்டார். மேலும் ஹஸன் கப்பலிலுள்ள மனிதர்களைப் பார்த்து ஒரு பெரிய தீர்க்கதரிசி முன்னெச்சரிக்கை செய்வது போல கூறியதாவது:-"என்னைக் கேட்டால் அச்சப்படுவதற்கு காரணம் ஒன்றுமில்லை என்றே கூறுவேன். இம்மரக்கலத்திலுள்ள நாம் மூழ்கிப் போகமாட்டோம் என்று ஆண்டவன் எனக்கு வாக்குறுதியளித்துள்ளான்" என்பதே. இதைக் கேட்ட மக்கள் அவரையே உற்றுநோக்கினர். ஒரு சிலரோவெனின், கவலையற்றிருக்கும் இவரது நிலைமையைக் கண்டு சிரிக்கவும் செய்தனர். எனினும், சில நேரம் கழிந்ததும் புயல் நீங்கிற்று. கடல் கொந்தளிப்பு அடங்கிற்று. அவ்வளவுதான், இம்மரக்கலத்திலுள்ள அனைவரும் விரைந்துவந்து ஹஸன் பின் ஸப்பாஹ் பாதத்தடியே வீழ்ந்தனர். இவர் உண்மையான பக்தர் என்னும் கடவுளால் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒரு பரிசுத்த பெரியாரென்றும், மரக்கலத்தோர் ஏற்றுக் கொண்டனர். இத்துடனில்லாமல் அவர்களெல்லாம் இஸ்மாயிலீயா கோரிக்கையை முழு மனதுடன் ஏற்றுக் கொள்ளவும் செய்தனர். ஹஸன் பின் ஸப்பாஹ் ஏன் இப்படி தைரியமாய் கூறினுர் என்று கவனிக்கப்புகுமிடத்து, கப்பலிலுள்ளவர்களெல்லாம் தண்ணீரில் மூழ்கிப்போய் விடுவார்களாயின் தன் வார்த்தை பொய் யென கூறுவதற்கு உலகத்தில் ஒருவருமே இருக்கமாட்டார்கள். இதற்கு விரோதமாய் தனது வார்த்தை உண்மையாய் விடுமாயின் தான் ஒரு பெரிய மஹான் என்பது எவருக்கும் சந்தேகமேயிராது என்று ஹஸன் எண்ணியதுதான். விஷயம் எப்படியாயினும் ஹஸன் கூறிய முன்னெச்சரிக்கை பூர்த்தியாயிற்று. உடனே மரக்கலமும், அதில் உள்ளவர்களும் தனது சிஷ்யகோடிகளாய் மாறினர் என்பது ஆச்சரியமில்லை.

சில தினங்களுக்குப் பின் மரக்கலம் ஒரு கரையை அடைந்தது. அந்த ஸ்தலத்தில் கிறிஸ்தவ மன்னர் ஆட்சி நடந்து வந்தது. அவர் இக் கப்பலோட்டிகள், ராணுவமாலுமிகளாய் இல்லாமல் இருப்பதையும், ஆனால் ஒரு துறவியின் அதிகாரத்தில் இக் கப்பல் நகர்த்து செல்கிறது என்பதையும் அறிந்தார். எனவே ஷெய்க் ஹஸன் பின் ஸப்பாஹ் என்பவருக்கு மறியாதையுடன் கவுரமாய் விருந்தொன்றளித்து அக் கப்பற் காரர்களுக்கு உபசரித்தனுப்பினுர். இங்கிருந்து புறப்பட்ட இக் கப்பல் சில தினங்கள் ஓடி, ஷாம் (ஸிரியா) எல்லைப்புறங்களை அடைந்தது. இங்கனம் கரையடைந்ததும் ஹஸன் பின் ஸப்பாஹ் கப்பல் பிரயாணத்தை விட்டு விட்டு கரை வெளியே ஈரான் தேசபக்கம் நடந்து சென்ருர். பிரயாணத்தினிடையே ஹலப், பக்தாத், கஜிஸ்தான், இஸ்பஹான், எஜ்த், கிர்மான் முதலிய ஆசியாமைனரைச் சேர்ந்த பிரபல நகரங்களைச் சுற்றிப்பார்த்தார். ஒவ்வொரு யிடத்திலும், இஸ்மாயீலியா மார்க்க சம்பந்தமாய் பிரசாம் செய்வதை மறந்து விடவில்லை. கிர்மான் நகரினின்றும் மீண்டும் திரும்பி. இஸ்பஹான் நகருக்கு வந்து சேர்ந்தார். இங்கு நான்கு மாதங்கள்

தங்கியிருந்த பின், கஜிஸ்தானுக்குச் சென்றார்.

இங்கு மூன்று மாதங்கள் தங்கிய பின் வாமகான் என்னும் நகரம் சென்றார். இங்கு மூன்று ஆண்டுகள் மற்றும் தங்கியிருந்து, தனது பிரசாரத்தைச் செய்துகொண்டிருந்தார். இவண் ஆயிரக்கணக்கான சிஷ்ய கோடிகள் இவருக்கு அமைந்தனர். இதற்குப்பின், அநேக பல நகரங்கள் சுற்றிய பின் அல்டிமூனத், நகர கோட்டைக்கு வந்து சேர்ந்தார். அங்கேயே தனது ஸ்தலத்தையும் நிச்சயப்படுத்திக்கொண்டார். அல்டிமூனத் என்னும் நகரம் கஸ்வீன் பட்டணத்தைச் சேர்ந்த ரூத்பாரென்னும் மாகாணத்திலுள்ள ஒரு கோட்டையாயிருந்தது. மேலும் இக்கோட்டையையும் இதற்குச் சுற்றுப்புறங்களையும் தாலிகான் என்னும் பெயர்கொண்டு மக்கள் அழைத்து வந்தனர். இக்கோட்டை பல மலைகளுக்கு நடுவே அமைந்திருந்ததுடன், அதிக உயரமான ஸ்தலத்திலுமிருந்தது. அதற்கு மேடுபள்ளமான பலவழியைக் கடந்து செல்லவேண்டும். இத்தகைய கோட்டை இங்கு ஏன் அமைந்தது என்பதையும் வாசகர்கள் தெரிந்துகொள்வது நன்மையளிக்கும்.

தைலம் தேச அரசர்களில் ஒருவர் வேட்டையாடுவதில் அதிக நட்புடையவராகயிருந்தார். ஒருமுறை எதிர்பாராவண்ணம் இவ்வரசர் கஷ்டசாத்தியமான ஸ்தலத்தை அடைந்தார். அவர் வேட்டை பிரயாணயின் பின் தொடர்ந்தே இவ்வபாயகரமான ஸ்தலத்தை அடைந்தார். அதுஎப்படியெனின், ஒரு ராஜாளியை சுட்டுக்கொண்டே அவரும் அவரைச் சார்ந்தவர்களும் பின் தொடர்ந்து செல்ல அந்த ராஜாளி பட்க்ஷியானது கோட்டை அமைந்திருக்கும் இவ்வபாயகரமான ஸ்தலத்தில் வந்து வீழ்ந்தது. அரசரும், மற்றவர்களும் அங்குவந்து சேர்ந்தனர். ஸ்தலத்தில் அவர்களெல்லாம் வந்துசேர்ந்ததும் ஆச்சரியகரமானதும், பாதுகாக்கப்பட்டதுமான, அருமையான பறந்த, அழகிய மைதானத்தை மலைமீது கண்டனர்.

இதைக் கண்ட அரசர், இதைக் காட்டினும் உறுதியானதும், அழகானதும் பாதுகாப்புமாய் இருக்கும் ஸ்தலம் கோட்டைக்கு வேறொன்று இருக்க முடியாதென தீர்மானித்தார். உடனே அங்கு அழகிய கோட்டை ஒன்று கட்ட உத்தரவு செய்தார். அதற்கொப்ப கோட்டையும் நிர்மாணமாயிற்று. இதற்கு ஆலதேமவுத் (மரண சாதனம்) என்றும் பெயரிட்டார். இப்பதம் வேட்டைப் பிராணிகளுக்கும், உயிர் வர்க்கத்திற்கும் தைலமீ தேசத்தவரால் சர்வ சாதாரணமாய் வழங்கப் பெற்றுவந்தது. ஆகவே, ஆலதேமவுத் என்னும் இப்பதத்தை உச்சரித்துக்கொண்டே பின்னர் மக்கள் இக்கோட்டைக்கு வந்து கொண்டிருந்தனர். இங்ஙனம் வைக்கப்பட்ட நாமம் சில நாட்கள் கடந்து அல்டிமூனத் என்னும் பெயராய்த் திரிந்து மாற்றமடைந்துவிட்டது.

ஹஸன் பின் ஸப்பாஹ் சில நாட்களுக்குள் கோட்டைக்கடுத்த பாகத்திலுள்ள அநேக பல மக்களை தன்னுடைய சிஷ்ய கோடிகளாய்ச் செய்துக் கொண்டார். பின்னர், கோட்டைக்குள்ளிருந்த அதிகாரியான மஹ்தீ என்பவரைச்சென்று சந்தித்தார். இந்த மஹ்தீ (பாதிமீ) என்பவரும் ஹஸன் பின் ஸப்பாஹை தனது குருவாய் ஏற்றுக் கொண்டிருந்தாராதலின், இவர்வந்ததும்அதிகமேதை மரியாதையுடன் வணங்கி இவர் கையைமுத்தியிட்டு வரவேற்றார். இவரைக்கண்டதும் ஹஸன் கூறியதாவது: இது சரியானஸ்தலம். ஒரு கவியைப் போன்ற ஸ்தலத்தில் அமைந்திருக்கிறது கோட்டை. அதுவும் மலைமீது வாய்த்திருக்கிறது. உலகத்தின் எல்லா பந்தத்துவத்தினின்றும் இது தனியே நிலைத்திருக்கிறது. உலகத்தாரை விட்டும் ஒதுங்கியிருக்கும் நமக்கு மகா சிலாக்கியமான இடம் இது. எனவே, ஒரு ஆட்டுத் தோலுக்கு அடக்கமாகும் இடத்தை எனக்குச் சொந்தமாய் அளிப்பீர்களாயின், இதற்கென மூவாயிரம் தீனார் நான் இதோ தருகிறேன் எனக்கூறி, மூன்று பைகளை மஹ்தீயின் முன் எடுத்து வைத்தார். மஹ்தீயோ விஷயத்தை ஆழ்ந்து கவனிக்கவில்லை. மேலும், கோட்டைக்குள் ஒரு பெரியார் இருப்பது நஷ்டமானதல்லவென்றும் எண்ணினார். எதிரே வைத்த மூவாயிரம் கொண்ட பைகளை சரியென எடுத்துக் கொண்டார். மேலும், விக்கிரயத்துக்கான உடன்படிக்கையில் கையெழுத்தும் போட்டுக் கொடுத்துவிட்டார். ஆனால், ஹஸன் பின் ஸப்பாஹ் ஒரு மாட்டின் தோலை வாங்கி அதைக் கயிரைப்போல் கத்தரித்து அதிக நீளமாய்ச் செய்து அதைக் கொண்டு அளக்க ஆரம்பித்தார். அக்கோட்டை பூராவும் அதன் அளவுக்கு வந்துவிட்டது. மஹ்தீயோ திடுக்கிட்டுப் போனார். என்ன செய்வதென்பது தெரியாமல் திகைத்தார். என்னதான் செய்ய முடியும்? விற்பனைச் சீட்டில் கையெழுத்தும் இட்டுவிட்டார். அன்றியும், அங்கிருந்த மக்களெல்லாம் ஒரு பெரிய பணக்காரரைக் காட்டிலும், மார்க்க சம்பந்தமான நற்குணமுள்ள ஒரு குருவின் உதவியையும் அன்பையுமே பெரிதென மதித்து ஹஸனைக் கொண்டாடி வந்தனர். ஆகவே, இம்முறையில் அல்டிமூனத் என்னும் கோட்டை ஹஸனுடைய கைவசம் வந்துவிட்டது.

ஹஸன் பின் ஸப்பாஹ் பிரஸ்தாப கோட்டையை கைப்பற்றிய விதம் வேறு முறையில் என்று சில சரித்திர ஆசிரியர்கள் கூறுகின்றனர். அவர்கள் கூற்று பின்வருமாறு:-மஹ்தீ (கோட்டையின் அதிகாரி) என்பவரும், அக்கோட்டையைச் சேர்ந்த மற்ற எல்லா இதர மக்களும் ஹஸன் பின் ஸப்பாஹ் மார்க்க சம்பந்தமான ஒரு பெரிய தலைவர்; உலகத்துறவி என்று பூரணமாய் நன்னம்பிக்கைக் கொண்டிருந்தனர். இத்தகைய தீட்சைக் கோடிகளெல்லாம் தன் வார்த்தைக்கு விரோதமாய், தன் அபிப்பிராயத்துக்கு நேர்மாறாய் நடக்கமாட்டார்களென்று தெரிந்து கொண்டார் ஹஸன். எனவே, ஒரு தினம் ஹஸன் நேரே கோட்டைக்கு ஏறிச் சென்றார். மஹ்தீயின் முன் நின்று, "புறப்படுங்கள். இந்தக் கோட்டையை காலி செய்து விடுங்கள்" என்று கூறினார். இது ஒரு பரிகாசமான வார்த்தையென மஹ்தீ நினைத்து நகைக்கலுற்றார். தன் இருப்பிடம்விட்டு அவர் நகராதிருப்பது கண்டு, ஹஸன் தன் இதர சிஷ்ய கோடிகளைப் பார்த்து, "இவரை இக்கோட்டையினின்றும் உடனே அப்புறப்படுத்திவிடுங்கள்" என்று கூறி சமிக்ஞை செய்தார். அவ்வளவுதான். அவர்களெல்லாம் மஹ்தீயைப் பிடித்து கோட்டையை விட்டு அப்புறப்படுத்தி வாம்கான் என்னும் நகரில் கொண்டுபோய் சேர்த்துவிட்டனர். அவரைச் சார்ந்த உபகரணங்கள் அவருடனே கொண்டுபோய்ச் சேர்க்கப்பட்டுவிட்டன. இவ்விஷயம் எப்படியாயினும், ஹஸன் கோட்டையை கைப்பற்றிக் கொண்டார். இஸ்மாயீலி என்னும் பிரிவுக்கு பிரஸ்தாபக் கோட்டை நடுநாயக அச்சாய் சமைந்துவிட்டது. இங்கிருந்தே சர்வ காரியங்களும் நடைபெறத் தொடங்கிற்று.

பின்னர் ஹஸன், இக்கோட்டையில் அமர்ந்து, அதிதீரமாகவும், தைரியமாகவும் தனது பிரசார வேலையைச் செய்யலானார். ஹஸன் தானொரு பாதிமீ (எகிப்து) அரசரைச் சேர்ந்தவரென எடுத்துக் காட்ட பிரயத்தனப்பட்டார். எனினும், உண்மை வெளித் தோற்றத்திலேயே அவர் பாதிமீ அரசாங்கத்தின் நண்பராய் நடித்து வந்தார். இஸ்மாயீலி பிரிவின் நம்பிக்கையில் கொள்கையில் சிறிது மாற்றமும் செய்தார் ஹஸன். மிஸர் (எகிப்து) லாட்ஜில் ஒன்பது வகுப்பு தாரதரங்கள் அமைந்திருந்தன என்பதை நீங்கள் மேலே வாசித்திருக்கிறீர்கள். ஹஸன் இதனை ஏழு வகுப்புகளாய் மாற்றினார். உண்மையில் ஹஸன் ஒரு புதிய மார்க்கத்தைப் பாத்திக் கொண்டிருந்தாரெனலாம். இதன் மூலகர்த்தா ஹஸன் என்றே கூறவேண்டும். ஹஸன் பின் ஸப்பாஹுடைய தீட்சைப் பெற்ற சிஷ்ய கோடிகள் நாளுக்கு நாள் ரூத்பார், காஸ்வீன், (காஸ்பியன்) பகுதிகளில் அதிகமாய் பெருகிக் கொண்டே சென்றனர். இவர்கள் மார்க்கசம்பந்தமான பிரசாரகர்களென்றும், மார்க்க பக்தி மிக்க மகான்களென்றும் வேஷமிட்டவர்களாய் வெளியில்

விளங்கினார்கள். அந்தரங்கத்திலோவெனின், இஸ்மாயீலியாக்கள், ரூத்பாரின் அரசாங்க அதிகாரத்தையே கைப்பற்றிக்கொண்டிருந்தனர். எனவே, அநேக பலவிடங்களில் இஸ்மாயீலி வர்க்கத்தினர் பல கோட்டைகளை கட்டிக்கொண்டனர். குறிப்பாய் அல்டிமூனத் என்னும் கோட்டையைச் சுற்றி மாபெரும் மாளிகைகள் பலவும் அபூர்வமான பெரிய பெரிய நந்தவனங்களும் நிர்மாணிக்கப்பட்டுவிட்டன. சுருங்கக் கூறுமிடத்து, ஹஸன் பின் ஸப்பாஹ் என்பவர் தங்கள் அதிகாரங்களையெல்லாம் எங்கு கைப்பற்றிவிடப் போகின்றாரோ என ஈரான் தேசத்தைச் சேர்ந்த அதிகாரிகளெல்லாம் கவலைப்பட ஆரம்பித்தனர்.

இவ்விஷயம் பக்தாத் நகரில் நிஜா முல் முல்க் (பிரதம மந்திரி) அவர்களுக்கும், அரசராயிருந்த மலிக்ஷாவுக்கும் தெரிந்தது. உடனே அல்டிமூனத் என்னும் திசைநோக்கி யுத்த சைன்ய பரிவாரங்களுடன் புறப்பட்டனர் இது சமயம் ஹஸன் பின் ஸப்பாஹைத் தொலைத்துத் தலை முழுகிவிட வேண்டும் என்று தீர்மானித்தார் மலிக்ஷா. சில நாட்களுக்குள் நிஜா முல்முல்கால் அனுப்பப்பட்ட யுத்த சைனியங்கள் அல்டிமூனத் என்னும் கோட்டையைச் சுற்றி முற்றுகையிட்டுவிட்டன. ஆனால் இரும்பு போன்ற உறுதியான இக் கோட்டையை எவரும் சின்னாபின்னப்படுத்தி கைப்பற்றிக் கொள்ள முடியாது என்று உணர்ந்திருந்தார் ஹஸன். எனினும் கோட்டையிலுள்ளவர்களின் வேளாண்மை விவசாயம், தடைபட்டுப் போயிற்று. பஞ்சத்தின் அச்சம் வந்து தீண்டிற்று. இதைக்கண்ட ஹஸன் ஒருபாயம் செய்தார். அதாவது தனது அத்யந்த சிஷ்யரொருவரை ஏவி, நிஜாமுல் முல்கை (பிரதம மந்திரியை)க் கொலை செய்து விடவேண்டுமென ஆக்ஞையிட்டார். இது சமயம் ஹிஜ்ரீ 485-ம் ஆண்டு ரமலான் மாதமாயிருந்தது. நிஜாமுல்முல்கென்பவர் மலிக்ஷாவுடன் நிஹாஜந்து என்னும் நகரில் தங்கியிருந்தார். இவர்கள் பக்தாத் நகரம் திரும்பிச் செல்ல ஏற்பாடுகள் செய்து கொண்டிருந்தனர். நற்குணமுள்ள மந்திரியார் நோன்பு திறந்த பின் தனது அந்தப்புரடேராவுக்குச் சென்றுகொண்டிருந்தார். இடையே பிச்சைக் கேட்பவனை போல் ஒரு சிறுவன் தோன்றினான் நிஜா முல் முல்க் அச்சிறுவன் கூறிக்கொண்டிருந்த பரிதாப விஷயங்களைக் கவனமாய்க் கேட்டுக் கொண்டேநின்றார். ஆனால், அச்சிறுவன் சமயம் பார்த்து, கட்கத்தால் அவரைத் தீர்த்துவிட்டான். மலிக்ஷா இதைக் கேட்டு அளவில்லா துக்கமடைந்தார். மேலும், சரியாக ஒரு மாதம்கூட அப்புறம் கடக்கவில்லை, இதற்குள் மலிக்ஷா என்பவரும் அதே ஸ்தலத்தில் காலகதியடைந்தார். இவரையும் ஹஸனே ஆள் வைத்து வேலையைமுடித்திருக்கவேண்டுமென்றனர் சிலர்.

—:—

### டெலிவிஷன் ஸெர்விஸுகள் விஸ்தரிப்பு

—:—

மைலுக்கு 2,000 பவுன் ஆகும் கேபிள்கள் தயாராகின்றன.

ஜூலை 22 - லண்டனிலிருந்து மாகாணங்களுக்கு உருப்பரப்பு ஏற்பாடுகளை விஸ்தரிப்பதற்கான ஆரம்ப வேலைகள் நடந்துகொண்டிருக்கின்றன என்று ஈவினிங் நியூஸ் ரேடியோ நிருபர் எழுதுகிறார். மைலொன்றுக்கு 2,000 பவுன் செலவாகக் கூடியபடி லண்டனிலிருந்து பர்மிங்ஹாம் வரை போடப்படப்போகும் கேபிள்கள் உற்பத்தி செய்யப்பட்டு வருகின்றன.

இந்தப் புதிய ஸெர்வீஸ் அமுலுக்கு வருவதற்குக் குறைந்தது ஒரு வருஷம் பிடிக்கும். லண்டனுக்கும் பர்மிங்ஹாமுக்குமிடையே எழுமைலுக்கு ஒன்றாக உருப்பரப்பும் கருவிகள் அமைக்கப்பட வேண்டும். இந்த வேலை முழுவதற்கும் கிட்டத்தட்ட ஐந்து லட்சம் பவுன் பிடிக்கும்.

கம்பியில்லாதத் தந்தி இணைப்பின் மூலம் உருப்பரப்புகளை தொலை தூரத்துக்கு அஞ்சல் செய்வது சம்பந்தமாக ஆராய்ச்சிகள் நடந்து கொண்டிருக்கின்றன.

++++++++++++++++++++++++++++++

நண்பர்களுக்கு

## நஜீமின் அறிவிப்பு

—:—

பறக்கத்தாபாத் வாசியும் ஜோஹர் சர்க்கார் மத இலாக்காவின் நற்சாட்சி பத்திரம் பெற்றவருமாகிய, N. A. ஸையத் சுலைமான் நஜீம் சிங்கையைவிட்டு, டெலுக் ஆன்சன் இந்தியன் முஸ்லிம் மஸ்ஜீது, இமாம் பதவியை 15–7–'46 முதல் ஏற்றுள்ளதால் அவருடன் கடிதப் போக்கு வரத்து செய்யும் அன்பர்கள் கீழ்கண்ட விலாசத்திற்கு எழுதும்படி கோரப்படுகின்றார்கள்.

விலாசம்: இமாம் S. S. நஜீம்,
இந்தியன் முஸ்லிம் மஸ்ஜிது,
டெலுக்ஆன்சன், TELUKANSON, F. M. S

++++++++++++++++++++++++++++++



# துரோகம் செய்யாதே!

(நிஃமத்துன்னிஸா)

– 1 –

தொண்டி என்ற ஊரில் ஒரு குடியானவன் இருந்தான். அவன் பெயர் காதர். அவனுக்கு ஒரு மகன் உண்டு. அவன் பெயர் ரசீன். ரசீன் கெட்டகுணமுள்ள பையன்.

ஒருநாள் அவன் வெளி ஊருக்குப் போய்வர எண்ணினான். உடனே, குடியானவனாகிய தன் தகப்பனிடம் தான் வெளிஊருக்குப் போய்வர வேண்டுமென்றும், தனக்குக் கொஞ்சம் பணம் வேண்டுமென்றும் கேட்டான். தகப்பன் கொஞ்சம் பணம் கொடுத்து புத்தி சொல்லி அனுப்பினான்.

ரசீன் பணத்தை வாங்கிக்கொண்டு வெளியூருக்குப் புறப்பட்டான். போகும் வழியில் ஒரு அரசமரத்தின்மேல் ஒரு காக்கை தன் குஞ்சுகளோடு குலாவிக் கொண்டிருக்கக் கண்டான். தாகம் பொறுக்க முடியாமல் அவன் அந்த காக்கையை நோக்கி, 'ஏ! காக்கையே! எனக்கு தாகம் அதிகம். நீ குளிக்கும் குளத்தைக் காண்பித்துத் தரமாட்டாயா,' என்று கெஞ்சினான். அதற்கு காக்கை பறந்து சென்று கொஞ்ச தூரத்துக்கப்பால் இருந்த ஒரு குளத்தைக் காட்டிற்று.

குளத்தை நோக்கி ரசீன் போகும்பொழுது ஒரு நரி வந்தது. அவனைப்பார்த்ததும், நரி, 'ஏ! குடியானவனே எனக்கு பசி அதிகமாக இருக்கிறது. நீ போகிற இடத்திற்கு நானும் வருகிறேன். எனக்கு கொஞ்சம் சாதம் பார்த்துக்கொடு,' என்று சொல்லுகிறது என்று அவன் தெரிந்து கொண்டான்.

அதற்கு, குடியானவன் மகன், 'என்னிடத்தில் ஒன்றுமில்லை தாகம் எனக்கு அதிகமாக இருக்கிறது. நான் போகிறேன், நீ கொஞ்ச தூரம் போனவுடன் ஒரு மரத்தின்மேல் ஒரு காகம் தன் குஞ்சுகளுடன் இருக்கும். நீ அதனிடம் உன் தந்திரத்தால் பயமுறுத்தி அதன் குஞ்சுகளுள் ஒரு குஞ்சை பறித்துக் கொள்' என்று சொல்லிவிட்டு தன் வழியே நடந்து போய்விட்டான்.

– 2 –

நரி கொஞ்ச தூரம் சென்று, மரத்திலுள்ள காக்கையைப் பார்த்து 'எனக்கு ஒரு குஞ்சு போடு, பசியாயிருக்கிறது. இல்லாவிட்டால் மேலே வந்து உன் குஞ்சுகளையும், உன்னையும் கொன்று விடுவேன்?' என்று பயங்காட்டிச் சொன்னது.

'நன்றாய்ச் சொன்னாய்! நான் பொரித்தக் குஞ்சுகளை உனக்குத் தருவேனோ! நீ வந்த வழியே திரும்பிப் போ' என்று காக்கை கோபமாய்க் கூறியது.

நரி மேலும் பயங்காட்டி, மரத்தின் மேல் ஏறப் பார்க்க ஓடும்போது காக்கை பயந்து தன் குஞ்சுகளில் ஒன்றைக் கீழே போட்டது. நரி அதை 'லபக்' என்று கவ்விக்கொண்டு, காக்கையை ஏமாற்றிவிட்ட சந்தோஷத்தால் ஓடிச் சென்றுவிட்டது.

தன் தந்திரம் பலித்ததைக் கண்ட நரி, மூன்று நாட்கள் தொடர்ந்து வந்து காக்கையை ஏமாற்றி மூன்று குஞ்சுகளை கவ்விக் கொண்டு சென்றுவிட்டது அப்பொழுதெல்லாம் காக்கைக்கு சொல்ல முடியாத வருத்தம் ஏற்பட்டது. அதனால் மரத்தின்மேலேயிருந்து அழுதுகொண்டே இருந்தது.

ஒருநாள் பசு ஒன்று புல் மேய அருகிலிருந்த வீட்டிலிருந்து வெளியே வந்தது. வரும் வழியில், காக்கை அழுது மூக்கைச் சிந்தியவாறு இருப்பதைக் கண்டு, 'காக்கையே உனக்கு என்ன நேர்ந்தது?' என்று பரிவுடன் கேட்டது.

'ஏ பசுவே! ஒரு நரி வந்தது. அது மூன்று நாட்களாக என்னை பயமுறுத்தி என் மூன்று குஞ்சுகளைக் கொண்டு சென்றுவிட்டது. அது இன்றும் வரும். வந்தால் நான் இன்றும் ஒரு குஞ்சை இழக்கவேண்டி வருமே. அதனால் தான் கவலையாய் இருக்கிறது' என்று காக்கை நடந்ததையெல்லாம் பசுவிடம் கூறியது.

பசு காக்கைச் சொன்னதைக் கேட்டதும் துக்கப்பட்டது உடனே அது, 'ஏ காக்காய்! உன்னை அந்த நரி ஏமாற்றிவிட்டது. அதற்கு மரம் ஏறமுடியாது. இனிமேல் நீ பயப்படாமல், அதை வந்தவழியே போகச் சொல்' என்று காக்கைக்கு யோசனை கூறிவிட்டு புல் மேய சென்றுவிட்டது.

அன்று, நரி முன்போல் காக்கையிடம் வந்தது காக்கை தன் வருத்தத்தையெல்லாம் சேர்த்துவைத்து, நரியைப் பார்த்து கோபமுடன் பேசி போகச் சொன்னது. நரி ஏமாற்றத்துடன் தலை குனிந்தவாறு செல்லும்பொழுது, வழியில் மேய்ந்துக் கொண்டிருந்த பசுவைக் கண்டவுடன் அதை

(532-ஆம் பக்கம் பார்க்க)

# மதிப்புரை

## காயிதே அஃலத்துக்கு கவியரசர் கடிதங்கள்

கவிஞர் இக்பாலின் அதிமேதை, தீர்க்க திருஷ்டி பாகிஸ்தானின் அவசியம் என்ற விஷயங்கள் காயிதெ அஃலத்துக்கு தனி கடிதங்களில் விவரிக்கப்பட்டிருக்கின்றன. இவைகளை ஒன்று சேர்த்து இக்பால் வாலிபர் சங்கத்தார், தெளிவாக பிரசுரித்திருக்கின்றார்கள். யாவரும் படிக்க வேண்டியது. பக்கம் 24. இதன் விலை 0-5-0 அ. 0-5-9 அணு அனுப்பினால் புஸ்தகம் செலவின்றி அனுப்பப்படும். கிடைக்குமிடம்:இக்பால் வாலிபர் சங்கம், புளியங்குடி, (திருநெல்வேலி).

## இஸ்லாமிய கவிச் சக்கரவர்த்தி அல்லது டாக்டர் முஹம்மது இக்பால்

இஸ்லாமிய கவிச் சக்கரவர்த்தியான டாக்டர் முஹம்மது இக்பாலின் வாழ்க்கை சரித்திரத்தை விரிவாக, எளிய முறையில் மௌலவீ (அபுல் ஹஸன் ஷாதலி) பாஜில் பாகவீ விரிவாக எழுதியிருக்கின்றார்கள். எல்லோரும் படிக்கவேண்டிய புஸ்தகம். இதன் விலை அணு 4. பக்கம் 32. கிடைக்குமிடம்:-முன்னேற்றம் காரியாலயம், திருநேல்வேலிப்பேட்டை.

## மாசிலாமணி மஹ்பூப் சுப்ஹானி

மெஞ்ஞானிகளின் தலை சிறந்தவரும், ஒலிமார்களுக்கெல்லாம் கிரீடாதிபதியுமான மஹ்பூப் சுப்ஹானி நாயகம் அவர்கள் ஜீவிய வரலாற்றையும், உயர்வையும், தயாளத்தின் சிகரத்தையும் தெளிவாக ஹாபிஸ் M. K. சையது அஹ்மது ஆலிம் எழுதியிருக்கிறார். யாவரும், படித்து தெரிந்து கொள்ள வேண்டிய புஸ்தகம். இதன் விலை காணப்படவில்லை. கிடைக்குமிடம்:-Secretary, மஜ்லீசுல் கௌது சங்கம், காயல் பட்டணம்.

## வாலிப உலகில் புரட்சி

வாலிபர்களுக்கு உணர்ச்சியின் மூலம் மறுமலர்ச்சி வாழ்க்கையின் அஸ்திவாரம். வாலிபத்தை காப்பது எப்படி என்பதை விரிவாக தோழர் ரசூல் கூறுகிறார். படியுங்கள். வியாபாரிகளுக்கு 20./· கமிஷன் தரப்படும். இதன் விலை அணு 4 கிடைக்குமிடம்:-முஸ்லிம் யூனியன், கடையநல்லூர்.

## பாகிஸ்தான் என்றால் என்ன?

பாகிஸ்தான் என்பதற்கு விரிவான பதில் இப்பத்தகத்தில் காணப்படுகின்றது. பாகிஸ்தான் அரசியலமைப்பும், எல்லைகளும், அரசியல்' பொருளாதாரம், ஆட்சி, தொழிற்சாலை சிறுபான்மையோர் நிலைமை இவைகளை நன்றாக விளங்கும் முறையில் எழுதப்பட்டிருக்கிறது. மௌலவீ மீ. இ. மு அபுல் ஹஸன் ஷாதலி அவர்களால் எழுதப் பெற்றது. இதன் விலை அணு 4. பக்கம் 36. கிடைக்குமிடம்:-முன்னேற்ற காரியாலயம், திருநெல்வேலிப்பேட்டை.

## மக்களின் ஜின்னாஹ்

70-வது ஜனன விழா வெளியீடாக ஜனாப் ஜின்னாஹ்வின் ஜீவிய சரித்திரத்தை தெளிவாக இதில் எழுதப்பட்டிருக்கிறது. அவருடைய பாகிஸ்தான் லட்சியமும் நன்கு விவரிக்கப்பட்டிருக்கின்றது. மதுரை V. M. பீர் முஹம்மது அவர்களால் எழுதப்பட்டது. இதன் விலை காணப்படவில்லை. பக்கம் 12. கிடைக்குமிடம்:-V. E. M. நாகூர்மீரு, அருப்புக்கோட்டை.

## முஸ்லிம் சமூக விழிப்பு

முஸ்லிம்கள் விழித்து இனி செய்யவேண்டிய மத, சமூக, சீர்திருத்தங்களையும், மதப்

---

(531-ஆம் பக்கத் தொடர்)

தந்திரமாய்க் கொன்று தின்றுக் கொண்டிருந்தது.

– 3 –

மறுநாள், வெளி ஊர் போயிருந்த குடியானவன் ரசீன் ஊர் திரும்பிக் கொண்டிருந்தான். அவன்தான் நரிக்கு சொன்னதை நினைத்து, காக்கை இதுவரையிலும் இறந்து போயிருக்குமென்று எண்ணி வந்துகொண்டிருந்தான். வரும்போது, பசு ஒன்று இறந்து கிடப்பதையும், நரி அதைத் தின்றுக்கொண்டிருப்பதையும் பார்த்து நரியிடம் செய்தியைக் கேட்டான். நரி ஆதிமுதல் அந்தம் வரையில் நடந்த செய்தியை வருத்தத்துடன் கூறியது. இதையெல்லாம் மரத்திலிருந்து கேட்டுக் கொண்டிருந்த காக்கை, இதற்கு எல்லாவற்றிற்கும் காரணம் குடியானவன் தான் என்று எண்ணி வருத்தப்பட்டது. காக்கை தான் செய்த உபகாரத்திற்கு குடியானவன் தன்னை துரோகம் செய்ததை எண்ணிக் கண்ணீர் வடித்து உட்கார்ந்திருக்கும் பொழுது, ஒரு பாம்பு குடியானவன் காலைக் கொத்திச் சென்றதைக் கண்டது. உடனே, காக்கை 'கா கா' என்று பறந்துபோய் அருகிலிருந்த வீட்டிலுள்ளவரை இறந்து கிடந்த குடியானவனை எடுத்துச் செல்ல செய்ததுடன், எங்கேயோ பறந்து போய்விட்டது.



பிரசாரம், தியாகபுத்தி, கல்வி, இஸ்லாமிய பிரசாரம் இவைகளை விளக்கமாக விவரிக்கப் பெற்றிருக்கிறது. யாவரும் தெரிந்து கொள்ளவேண்டிய விஷயம் பல உள்ளது. மீ. இ. முஹம்மது அப்துல் காதிர் அவர்களால் எழுதப்பெற்றது. இதன் விலை அணு 6. பக்கம் 28. கிடைக்குமிடம்:-முஸல்மான் ஆபீஸ், தென்காசி

## இஸ்லாமியன் எழுச்சி

இஸ்லாமியன் எழுச்சி, முல்லாக்களின் தோற்றம் ஜனாப் ஜின்னாஹ் உதயம், காயிதே ஆஜம் கர்ஜனை இவைப் போன்றவைகளை கீதமாக இயற்றி யிருக்கின்றார். இயற்றியவர் மதனீ. இதன் விலை அணு 4. பக்கம் 24. கிடைக்குமிடம்:-A. சுலைமான், ஜெண்ட்ஸ் டைலர், ஆத்தூர் (சேலம், Dt.,)

## பாக்கிய பாகிஸ்தான் அல்லது ஜின்னாஹ்வின் கோரிக்கை

காயிதே அஃலம் அவர்கள் 70 வயது ஜனன விழாவின்போது அவரது ஜீவிய சரிதையும், பெரும் நோக்கமும், பாகிஸ்தான் லட்சியத்தின் நோக்கம் கொண்டு இது வெளியிடப்பட்டிருக்கிறது.

இதன் விலை காணப்படவில்லை. பக்கம் 32. ஆக்கியோர்: அ. ஜெய்னுல் ஆப்தீன். கிடைக்குமிடம்:-எஸ் பீர் முஹம்மது & கோ., பஃப்பில் மணிச்சேஞ்சர், ரயில்வே ஸ்டேஷன், சிங்கப்பூர்.

## கலப்பு மண காதலர் தெம்மாங்கு

திண்டுக்கல் திரு. எம் ஆர். மந்திரனால் எளிய சொற்களில் கலப்பு மணக் காதலர் தெம்மாங்காக இயற்றப்பட்டிருக்கிறது. இதன் விலை அணு 3. பக்கம் 12. கிடைக்குமிடம்:-ல. வீரராகவன், திராவிட கழக வெளியீடுகள். தாடிக்கொம்பு ரோட், தாருமண்டி, திண்டுக்கல்.

## நவீன முஸ்லிம்

66 பக்கம் கொண்ட D/C சைஸ் நூல். இதன் ஆசிரியர்:-T. A. W. இப்ராஹீம். இதன் விலை. அணு 8. கிடைக்குமிடம்:-நவீன முஸ்லிம் புக் டிபோ, 571/H. ஹைரோடு, திருவல்லிக்கேணி, மதராஸ்.

இது ஒரு முஸ்லிம் சமூக சீர்திருத்த சிறிய நூல். ஆயினும், தற்கால நிலை அக்காலமும், இக்காலமும், ஹிந்து முஸ்லிம் கலகங்கள். நாம் ஏன் முஸ்லிமாயிருக்கிறோம், கல்லாத வனிதையர் குடும்ப நிலை பாஷணயில் முஸ்லிம்களின் ஆடம்பரச் செலவு, கத்னா விவாகம், கச்சேரி, பந்தயங்கள், சூதாட்டம் என்பன போன்ற தலையங்கங்கள் கொண்ட பல அருமையான விஷயங்களை ஆசிரியருக்குத் தக்க முறையில் அழகாய் எழுதியிருக்கிறார். பொதுவாய் தேகத்தில் புண் கட்டியிருந்தால் டாக்டர்கள் முன்பின் யோசிக்காமல் அதைக் கீறி கிழிப்பதுபோல், இவர் விஷயங்களை எடுத்துரைக்கின்றார். வியாதியஸ்தனை எப்படியேனும் சொஸ்தப்படுத்துவது வேண்டுமென டாக்டரின் எண்ணம் அது போலவே இவரும் முஸ்லிம் சமூகத்தில் காணப்படும் குறைகளை தைரியமாய் பெருந்தன்மையுடன் எடுத்துக் காட்டுகின்றார். பொதுவாய் ஒவ்வொரு முஸ்லிம் ஆணும், பெண்ணும் இதை வாங்கிப் பார்ப்பது பிரயோஜனம் தரும் என்பது எமது அபிப்பிராயம்.

## உமரெ பாரூக்

249 பக்கங் கொண்டது. இந்நூல் D/C சைஸ். தயாரித்தவர்:-அல்ஹாஜ பா. தாவூத் ஷா சாஹிப் B.A., (தாருல் இஸ்லாம் ஆசிரியர்). இதன் விலை ரூ. 2-4-0. கிடைக்குமிடம்:-ஷாஜஹான் புக் டிபோ, 30, சந்தோம் ஹைரோட், மயிலாப்பூர், சென்னை.

இதன் முதல் வெளியீடு:-1941-ஆம் ஆண்டில் வெளிவந்துவிட்டது. இரண்டாம் பதிப்பு எமது பார்வைக்கு அனுப்பப்பட்டிருக்கிறது. இது எப்ரல் 1946-ல் வெளியாகிவிட்டது. இது இரண்டாம் பதிப்பானதால் இப்புத்தகத்தைப் பற்றி ஏதும் நாம் விமர்சனம் செய்ய வேண்டியதில்லை. ஹஜ்ரத் உமர் (ரலி) அவர்கள் உண்மை சரிதையைப் பார்க்க விரும்புவோர் இதை வாங்கி படித்துக் களிகூறுவாராக.

ஃ ஃ ஃ

ஆரிபுபில்லா அல்லாமா ஷெய்கு பாவா ஷெய்கு சுலைமானுல் காதிரிய்யில் சித்தீய்யில் புகாரிய்யி (மர்ஹூம்) அவர்கள் ஆப்டோன் படம் கிடைக்கப் பெற்றோம். இதன் விலை காணப்படவில்லை. கிடைக்குமிடம்:-S. மஸ்தான் சாஹிப், புதுப்பங்களா, முஹியித்தீன் பள்ளித் தெரு, கோட்டாறு.

ஃ ஃ ஃ

பினங்கு, அஞ்சுமன் ஹிமாயத்துல் இஸ்லாம் சங்கத்தின் ஜமாலியா பைத்தாளர் சபையோர்களால் ராத்தீபு ஜமாலியா 5-வது வருஷப் பூர்த்தி விழா நடைபெற்றது. அவ்வமயம், "ராத்தீபு ஜமாலியா"வை முஸ்லிம் சோதரர்கள் வாரந்தோறும் ஓதி நல்ல பலனைப் பெற்று கொள்ள வேண்டும் என்று அறிவிக்கப்பட்டது.

(மவுலானா—ஸித்திக்கீ)

### ஸ்நானம்

1. ஸ்நானம் எப்போது அவசியமாகிறது?

(1) ஸ்திரீ பருஷ சம்சர்க்கம்.

(2) இந்திரியம் வெளிப்படுதல்.

(3) ஸ்திரீகள் மாதத் தீட்டினின்று அல்லது பிள்ளைப் பேற்றுத் தீட்டினின்று சுத்தமாதல் ஆகியவைகள் ஏற்படுமாகில் ஸ்நானம் அவசியமாகிறது.

2. கட்டாய ஸ்நானத்தின்போது முக்கியமாகச் செய்ய வேண்டியவைகள் என்னென்ன?

(1) நன்றாக சுத்தமாகும் வரை வாயை கொப்பளிக்க வேண்டும்.

(2) நாசித் தண்டுவரை நாசித் துவாரத்தைக் கழுவவேண்டும்.

(3) உரோமம் உள்பட உடம்பின் உறுப்புக்களனைத்தையும் நன்றாகக் கழுவவேண்டும்.

3. கடமையான ஸ்நானத்தை செய்ய வேண்டிய முறை என்ன?

(1) ஒலூ செய்வதாக (நிய்யத்) நிர்ணயஞ் செய்தல்.

(2) இரண்டு கைகளை மணிகட்டுவரை மூன்று முறை கழுவுதல்.

(3) மர்மஸ்தானங்களை மூன்று முறை நன்றாகக் கழுவவேண்டும்.

(4) உடம்பின் எந்தப் பாகத்தில் அழுக்கிருந்தாலும் நன்றாகக் கழுவ வேண்டும்.

(5) அதன் பின்னர் ஒலூ செய்ய வேண்டும்.

(6) இறுதியாக உடம்பின் எல்லா உறுப்புக்களையும் உரோமம் உள்பட நன்றாக் கழுவவேண்டும்.

### தயம்மும்

1. வியாதியா யிருந்தால், அல்லது தண்ணீர் கிடைப்பதற்கு வசதியில்லாம லிருந்தால் குஸ்லுடைய ஸ்நானம் அல்லது ஒலூ செய்வதெப்படி?

அதுபோன்ற சமயங்களில் "தயம்மும்" செய்து கொள்ளலாம்.

2. தயம்மும் செய்வதற்கு வேண்டிய கடமையானவைகள் என்ன?

(1) அசுத்தத்தினின்றும்நீங்கும் பொருட்டுத் தயம்மும் செய்வதாக நிர்ணயம் செய்து கொள்ளுதல்.

(2) இரண்டு உள்ளங் கைகளையும் சுத்தமான மண்ணின்மீது இலேசாக அடிக்க வேண்டும்.

(3) முகம் முழுவதும் உள்ளங் கைகளைக் கொண்டு ஒரு முறை தடவுதல்.

(4) மறுபடியும் முன் போலவே சுத்தமான மண்ணின்மீது இலேசாக அறைந்து வலக்கையின் நுனி விரல்களிலிருந்து முழங்கையட்பட முன் கையையும், இடக்கையினால் தடவிக் கொள்ளல் வேண்டும். இவ்விதமே வலக்கையைக் கொண்டு இடக்கையின்மீதும் தடவ வேண்டும்.

### ஒலூ தயம்முமின் முறிச்சல்கள்

ஒலூ முறிந்து போகும் விதங்கள் யாவை?

(1) முன், பின் துவாரங்களி லிருந்து சிறு நீர், அபான வாயு, அசுசி, இந்திரியம், புழுக்கள், சிறுகல் வெளிப்படுதல்.

(2) வாய் நிறைய வாந்தி செய்தல்.

(3) கட்டி, டரு, அல்லது காயத்திலிருந்து இரத்தம், சீழ், அல்லது ஊண் தண்ணீர் தன் ஸ்தானத்திலிருந்து வழிந்தோடுதல்.

(4) நித்திரையினால் அல்லது நித்திரை மயக்கம் முதலியவற்றால் மெய் மறந்து போகுதல்.

(5) பைத்தியம் கொள்ளுதல், மயக்கங் கொள்ளுதல், லாகிரி வஸ்துவால் போதை கொள்ளுதல்.

(6) தொழும்போது வெடி சிரிப்பு சிரித்தல்.

தயம்மும் மேற்கூறிய காரணங்களாலும் முறிந்து விடுகிறதா?

தயம்மும் மேற்கூறிய காரணங்களால் முறிந்து விடுவதுமன்றி தயம்மும் செய்ய வேண்டிய காரணம் நிவர்த்தியானவுடனும் முறிந்து விடுகிறது. அதாவது:-நோயாளி சொஸ்த மடைந்தவுடனே, அல்லது ஒலூ செய்வதற்குப் போதுமான தண்ணீர் கிடைக்கக் கூடுமாயின் உடனே தயம்மும் முறிந்து போகும்.

### ஒலூ அல்லது தயம்மும் இன்றி செய்யக் கூடாத காரியங்கள்

ஒலூ அல்லது தயம்மும் செய்யாமல் என்னென்ன காரியங்கள் செய்வது தடுக்கப்பட்டிருக்கின்றன?

(1) தொழுகை.

(2) மக்காவிலுள்ள பரிசுத்தக் கஃபா வைச் சுற்றி வருதல்.

(3) பரிசுத்தக் குர்ஆனைத் தூக்குதல் அல்லது தொடுதல்.

குறிப்பு:-விவேகமடையாத குழந்தைகள், அஃதாவது சுமார் ஏழு வயதுவரை பரிசுத்தக் குர்ஆனை ஓதுவதன் நிமித்தம் ஒலூவின்றி எடுத்துச் செல்லலாம்.

### பாங்கு

1. பாங்கு அல்லது அதான் என்ருல் என்ன?

பாங்கு என்பது தொழுகைக்கு முதன் முதல் கூப்பாடாகும்.

2. எப்போது, என் பாங்கு சொல்லப்படுகிறது?

நன்னம்பிக்கைக் கொண்டவர்களுக்குத் தொழுகையின் நேரத்தை ஞாபகப்படுத்துவதற்கும் அவர்களை அழைப்பதற்கும் உரத்த குரலில் பாங்கு சொல்லப்படுகிறது.

3. அதான் சொல்லுவதெப்படி?

கஃபாவின் பக்கம் திரும்பிக் கொண்டு முஅஜ்ஜின் (அதான் கூறுபவர்) கீழ்க்காணுமாறு உரத்த குரலில் கூறுகிருர்.

(1) அல்லாஹுஅக்பர், அதாவது:- ஆண்டவனே மிகப் பெரியவன். (நான்கு முறை).

(2) அஷ்ஹது - அன்லா இலாஹ இல்லல்லாஹ். அதாவது:-நிச்சயமாக வணக்கத்துக்குரியவன் ஆண்டவனைத் தவிர்த்து வேருெருவரு மில்லையென நான் அறுதியிட்டு உறுதி கூறுகிறேன். (இரு முறை).

(3) அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரசூலுல்லாஹ். அதாவது:-நிச்சயமாக முஹம்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹுத்த ஆலாவின் திருத்தூதர் என்று அறுதியிட்டு உறுதி கூறுகிறேன். (இரு முறை).

(4) ஹய்ய அலஸ் ஸலாத். அதாவது:- தொழுகைக்கு வருவீர்களாக (இரு முறை) இங்ஙனம் சொல்லும்போது வலத்தோள் பக்கம் இரு முறையும் முகத்தைத் திருப்பிக் கூறவேண்டும்.

(5) ஹய்ய அலல் பலாஹ், அதாவது:- பரிபூரண ஈடேற்றத்துக்கு வருவீர்களாக. (இரு முறை) இங்ஙனம் சொல்லும்போது இடத்தோள் பக்கம் இரு முறையும் முகத்தைத் திருப்பிக் கூறவேண்டும்.

(6) அல்லாஹுஅக்பர். இரு முறை.

(7) லாயிலாஹ இல்லல்லாஹ் (ஒரு முறை) அல்லாஹ்வைத் தவிர வேறு ஆண்டவன் இல்லை.

குறிப்பு:-விடியற்காலை அதான் சொல்லும்போது (5)-ஆவதுக்கப்புறம் அஸ்ஸலாத்து கய்ருன் மினன்னவும். அதாவது:-தொழுகையானது தூக்கத்தைக் காட்டினும் மேலானதாயிருக்கிறது. (இரு முறை) என்று சேர்த்துக் கொள்ள வேண்டும்.

### இகாமத்

4. இகாமத் என்ருல் என்ன? அது எப்போது சொல்லப்படுகிறது?

இகாமத் என்பது தொழுகைக்கு இரண்டாவது தடவை கூப்பிடுவதாகும். அதுபர்ல் (கட்டாய) தொழுகையை ஆரம்பிக்கு முன்னர் சொல்லப்படுகிறது. அது அதானை ஒத்திருக்கும். ஆனல், "கத்காமதிஸ் ஸலாத் அதாவது:-தொழுகையானது நிச்சயமாகவே ஆரம்பித்து விட்டது" என்னும் வாக்கியம் (5) ஆவதுக்கப்புறம் சேர்க்கப்பட வேண்டும்.








(ஹாபிஸ் முஹம்மது யூசுபு பாகவீ)

### பல குர்ஆன்கள்

ஹஜ்ரத் உதுமான் (ரலி) அவர்கள் சேகரம் செய்து வெளியிட்ட குர்ஆன் ஷரீபுக்கு மாற்றமாய் ஒரு சில தோழர்களான சஹாபாக்கள் குர்ஆனைத் தையார் செய்து வைத்திருந்தனர். இதுதான் சரியான தொகுப்பென்றும் அவர்கள் எண்ணியு மிருந்தனர். எனவே, ஹஜ்ரத் உதுமான் (ரலி) அவர்கள், தாம் வெளியிட்டிருக்கும் குர்ஆன் பிரதிக்கு மாற்றமாய்க் காணப்படும் பிரதிகளெல்லாம் அழிக்கப்பட்டுவிட வேண்டுமென உத்திரவு செய்தார்கள். ஆனல், குர்ஆனை தொகுத்து வைத்திருந்தவர்கள் இவ்வுத்திரவை எற்றுக் கொள்ள மறுத்துவிட்டனர். அவர்கள் யார் யார் என்பதைப் பின்னே காண்பீர்களாக:—

**அப்துல்லாஹ் பின் மஸ்வூத் குர்ஆன்:**

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், 'இவரிடம் குர்ஆனைக் கற்றுக் கொள்ளுங்கள்' என்று கூறிய பெருமைப் பெற்றவர்கள் இப்னு மஸ்வூத். எனவே, இவர்கள் தங்களபிப்பிராயப்படி குர்ஆன் ஒன்றைத் தொகுத்து வைத்திருந்தார்கள். இவர்களது குர்ஆன் ஹஜ்ரத் உதுமான் (ரலி) அவர்கள் குர்ஆனுக்குச் சிறிது மாற்றமாய்க் காணப்பட்டது. இம்மாற்றம் தொகுப்பு விஷயத்திலல்லாமல் பொருள் வாக்கியங்கள் சம்பந்தத்திலல்லவென்பதை நீங்கள் உணர்ந்து கொள்ளல் வேண்டும்.

(பத்ஹுல்பாரீ, வா. 9. பக்கம் 38).

நஸயீ, அபூதாவூத் கிரந்த கர்த்தாக்கள் கூறுகின்றபடி, ஒரு நாள், இப்னுமஸ்வூத் அவர்கள் மின்பர் (பிரசங்க மேடை) மீதேறி கூறியதாவது:—'நீங்களெல்லாம் ஜைத் பின் தாபித் குர்ஆனை ஓதுகின்றபடி ஏன் என்னை ஓத வேண்டுமென்று கட்டாயப்படுத்த வேண்டும்; நான் நேரே ரசூலுல்லாஹ்வின் திருவாயினின்றே குர்ஆனைக் கற்றுக் கொண்டிருக்கிறேன்' என்பதே. ஹாபிஜ் இப்னு ஹஜர் அவர்கள் கூற்றின்படி, இப்னு மஸ்வூத் அவர்களின் குர்ஆன் தொகுப்பானது, குர்ஆன் இறங்கின முறைக் கொப்பானதாயில்லை என்று தெரிந்து கொள்ளுகிறோம். இக்கருத்தையே இமாம் இப்னு நதீம் அவர்களும் ஊர்ஜிதப்படுத்தி யிருக்கின்றார்கள். இப்னு மஸ்வூத் (ரலி) அவர்கள் தங்கள் குர்ஆனைப் பின் காணுமாறு தொகுத்திருந்தார்கள்:—

"முதன் முதலாய் பகரா, பின்னர் நிஸா, ஆலெ இம்ரான், அலிப்லாம்மீம் ஸாத், அன்ஆம், மாயிதா, யூனுஸ், பரா அத், நஹ்ல், ஹுத், யூசுப், பனீ இஸ்ராயீல், அன்பியா, மூஃமினூன்,ஷுஅரா,ஸாப்பாத், அஹ்ஜாப், கஸஸ், நூர், அன்பால், மர்யம், அன்கபூத், ரூம்........." இங்ஙனமே இறுதிவரை இப்னுமஸ்வூத் (ரலி) அவர்கள் குர்ஆனை சேகரம் செய்திருந்தார்கள். பூரா விவரம் வேண்டுவோர், இமாம் இப்னு நதீமுக்குள்ள, கிதாபுல் பெஹ்ரிஸ்த் என்பதைப்பார்ப்பார்களாக.

இதுவுமல்லாமல், இமாம் இப்னு நதீம் அவர்கள் கூற்றின்படி, ஹஜ்ரத் இப்னுமஸ்ஊத் (ரலி) அவர்களிடம் பல குர்ஆன்கள் காணப்பட்டன. இவற்றில் இரண்டு பிரதிகளாவது ஒன்றுக்கொன்று ஒற்றுமையாய்க் காணப்படவில்லை. இது, இமாம் இப்னுநதீம் அவர்களின் கூற்று.

**ஹஜ்ரத் அலீயின் குர்ஆன் :**

ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்கள் ஒரு குர்ஆன் தொகுத்துச் சேர்த்து வைத்திருந்தார்கள். இது ஆதி முதல் குர்ஆன் எப்படி இறங்கியதோ அப்படியே சேர்த்து வைக்கப்பட்டதாகும். ஹாபிஜ் இப்னு ஹஜர் அஸ்கலானீ அவர்கள் இது சம்பந்தமாய்ப் பின் காணுமாறு எழுதுகின்றார்கள்:—"ஹஜ்ரத் அலீயின் குர்ஆன். ஆதிமுதல் இறங்கியதுபோல் சேர்த்து வைக்கப்பட்டிருந்தது. குர்ஆன் ஆரம்பம், இக்ரஃ என்று ஆரம்பமாகிறது; பின்னர் முத்தத்திர்; பின்னர் நூன் வல்கலமி; பின்னர் முஜ்ஜம்மில்; பின்னர் தப்பத் எதா; பின்னர் தக்வீர்; பின்னர் சப்பஹ என்பன போன்ற அத்தியாயங்கள் தொடர்ச்சியாய் சேர்த்து வைக்கப்பட்டிருந்தன; மக்காவில் இறங்கிய வாக்கியங்களெல்லாம் முடிந்தபின், மதீனாவில் இறங்கிய வேத வாக்கியங்களும், அத்தியாயங்களும் தொடர்ச்சியாய்க் காணப்படுகின்றன."

(பத்ஹுல் பாரீ, வா. 9. பக்கம் 38.)

இமாம் இப்னு நதீம் அவர்கள் மீண்டும் எழுதியிருப்பதாவது:—"நான் அபூ எஃலா ஹம்ஜத்துல் ஹுஸைனீ அவர்களிடம் ஒரு குர்ஆனைப் பார்த்தேன். இது அவர்கள் குடும்பத்தில் பரம்பரையாய் பாதுகாக்கப்

பட்டு வந்தது. இது ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்கள் கரத்தால் எழுதப்பட்டிருந்தது'' (இப்னு நதீம் ஹிஜ்ரீ 4-ஆம் நூற்றாண்டிலுள்ளவர். எனவே, இப்னு நதீம் கூற்றிலிருந்து, நான்காம் நூற்றாண்டு வரை ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்களால் எழுதப்பட்ட குர்ஆன் அதி ஜாக்ரதையாய் பத்திரமாக வைக்கப்பட்டு வந்திருக்கிறது என்பதை நாம் தெரிந்து கொள்ளுகிறோம்.) கிதாபுல் பெஹ்ரிஸ்த், பக்கம் 28.)

### உபையிப்னு கஃபின் குர்ஆன்

உபையிப்னு கஃபின் குர்ஆன் சம்பந்தமாக, ஹாபிஜ் இப்னுஹஜர். இமாம் சயூத்தீ முதலியவர்கள் பலவிடங்களில் கூறியிருக்கின்றார்கள். இப்னு நதீம் அவர்கள் கூறுவதாவது:—பஸரா நகரினின்றும், ஆறு மைலுக்கப்பால் கர்பத்துல் அன்சார் என்று ஒரு கிராமமுண்டு. இங்கிருந்து கொண்டுதான் உபையிப்னு கஃப் குர்ஆனைத் தொகுத்தார். வாக்கியங்களை யெல்லாம் தொகுத்து முடித்தப்பின் அதற்கான பெயர்களைப் பின்னர் எழுதினார். இவர் தொகுத்த குர்ஆன் வாக்கியங்களின் எண்ணிக்கை, 6210 ஆகும்.

### ஆயிஷா (ரலி) வின் குர்ஆன்

இது சம்பந்தமாய் புகாரீ என்னும் கிரந்தத்தில் காணப்படும் விஷயமாவது:-இராக் தேசத்தினின்றும் ஒருவர் வந்து, ஹஜ்ரத் ஆயிஷா (ரலி) அவர்களிடம், 'எ உம்முல் மூஃமினீன் அவர்களே! தங்களிடம் உள்ள குர்ஆனை எனக்குக் காட்டுவீர்களாக. நான் அதைப் பார்த்து என்னிடமுள்ள குர்ஆனைச் சரி பார்த்துக் கொள்ளுகிறேன்' என்றார். அத்தியாயங்கள் பலவாறாய் மனிதர்களால் ஓதப்படுகின்றன என்று அவர் கூறியதைக் கேட்ட ஹஜ்ரத் ஆயிஷா (ரலி) அவர்கள், அத்தியாயங்களை முன் பின் ஓதினால் என்ன? இதனால் பாதக மொன்றுமில்லையே என்று கூறியதன்பின், தங்கள்பாலிருந்த குர்ஆன் பிரதியைக் கொண்டு வந்து கொடுத்தார்கள். எனவே, அந்த இராக்கீதன் பாதையை ஒத்திட்டுப் பார்த்து சரிபடுத்திக் கொண்டார். (இங்ஙனம் ஹஜ்ரத் ஆயிஷா (ரலி) அவர்கள் கொண்டுவந்து காட்டிய பிரதி ஹஜ்ரத் அபூபக்ர் (ரலி) அவர்களால் தொகுக்கப்பட்டப் பிரதியா யிருக்கலாம் என்பதில் ஆச்சரிய மொன்றுமில்லை.) இஃதிங்ஙனமிருக்க, ஒரு சில எதிர் மத வாதிகள் குர்ஆன் சேகரிப்பு விஷயத்தில் பல தகராறுகள் ஏற்பட்டிருக்கின்றன வென்றும், பரிசுத்த குர்ஆனில் சில வாக்கியங்கள், இக்குழப்பத்தின் காரணமாய் விடப்பட்டுப் போயிருக்கின்றன வென்றும் கூறுகின்றனர். இவர்களுக்காதாரமாய், தப்ஸீர் ஸைஹக்கீ போன்ற முஹத்திதீன்கள் (ஹதீஸ் வாக்கியங்களின் கூற்றாளர்) அவர்கள் கூறுகின்ற வார்த்தைகளைக் கூறிக் கொண்டிருக்கின்றனர். சரியான ஆராய்ச்சியின்படி, குர்ஆன் அறைகுறையாய் நின்றுவிட்டது என்று எவராலும் சொல்லப்படுவதற்கில்லை.

இதுவுமல்லாமல், முஸ்லிம்களுள் பெரிய பிரிவினராய் விளங்கும் ஷீயாக்கள், ஹஜ்ரத் அலி (ரலி) அவர்களின் குர்ஆன்தான் சரியானதென்றும், ஹஜ்ரத் அபூபக்ர், உதுமான் (ரலி) இவர்களால் முற்றுப் பெற்ற குர்ஆன் ஏற்றுக் கொள்ளப்படுவதற்கில்லை யென்றும் கூறுகின்றனர். எனினும் ஷீயாபிரிவின் பெரிய இமாமான, அல்லாமாதப் ரஸீ என்பவர் தனது, குர்ஆன் வியாக்யான கிரந்தமாம் தப்ஸீர், மஜ்மவுல் பயான்' என்னும் கிரந்தத்தில், தற்சமயம் உலக முஸ்லிம்களின் கரங்களில் நின்றிலங்கும் குர்ஆன் தான் சரியானதென்றும் இதற்கு விரோதமாய்க் கூறப்படும் கூற்றுக்களெல்லாம் நம்பக் கூடியதல்ல வென்றும், ஆராய்ச்சியின் போது ஸ்திரமாய் நிற்கக் கூடியதல்ல வென்றும் சவிஸ்தாரமாய் வரைந்திருக்கிறார். (மஜ்மவுல் பயான் வா 1 பக்கம் 4)





# கவியரசர்...........

(முகவை K. M. செய்யத் சித்தீக்)

அவன் மனம் நிம்மதியடையவில்லை. இரவு பகல் எந்நேரமும் கவி மழையை வருஷித்துக் கொண்டே இருக்கிறான். கண்கள் இயற்கையின் வனப்பை ஆகர்ஷித்துக்கொண்டிருக்கின்றன. அவன் தூங்குவதில்லை.

கவிஞன் ஆனந்தங் காணும் உலகிலே அவன் ஆனந்தங் காணவில்லை. ஏக்கம் நிறைந்த பார்வையும் இடை இடையே ஏற்படும். பெருமூச்சும்......தான் ஓர் கவியாக ஆகவில்லையே என்ற கவலையை எடுத்துக் காட்டுகிறது.

கவி கவியாக ஆகவேண்டும். அவன் மனதிலே ஏற்படும் இதே ஆசை கனல் விட்டு எரிகிறது. யாருடனும் கலகலப்பாவோ, இன்பமாகவோ பேசுவதில்லை. சிந்தனை சென்ற விடமெல்லாம் அவன் மனமும் போய்க் கொண்டிருக்கின்றது. காலம் இறந்துக் கொண்டே இருக்கிறது. கவியின் தாபம் பெருகிக் கொண்டே வருகிறது. உள்ள சுகத்தையும் இழந்து உருண்டோடும் உலகத்தோடு அவன் ஓடிக் கொண்டிருக்கிறான்.

......இளமை கழிந்தது. வாலிபம் வந்தடைந்தது. இடைவிடாத......வருத்தினால் பல நாள் முயற்சியினால், 'முயற்சி வினை கண்டது' ஊணிழந்து, உறக்கமிழந்து, சுகமிழந்து செல்ல, மனம் சுத்தமடைந்தது...... கவியும் வந்தது. காதல் கிழத்தைக் கிள்ளித் துள்ளி எழச் செய்தது. மனமுருகும் சோகக் காதல் கவி மக்களை மயக்கியது. கவிஞனின் உள்ளமும் களி கொண்டது.

இன்பம்......இன்பம்...எல்லாம் இன்பந்தான். நாட்கள் சென்றது. காதல் கவிப்பைக் காட்டிய கவிஞனுக்கும் ஒரு காதலி கிடைத்தாள். பின்னும் ஒரு காதலி கன உலகக் காதலியுடன் நினை உலகக் காதலியும் சேர்ந்து கொண்டாள். வாழ்க்கைப் பாதையிலே செல்லுவது கவிக்குத் துன்பமாய்த்தானிருந்தது.

காதலியோ கவியின் காதல் கவிதை மதுவையுண்டு உண்டு சொக்கிப் போய்விட்டாள்.

காலம் செல்லச் செல்ல கவிஞனின் கவியும் பெருகவாரம்பித்தது. எங்கும் அழைப்பு ஏராளமான புகழ் மொழிகள் அழைக்காதவர்களில்லை, அன்பு கொள்ளாத மக்களில்லை, கவியின் பாடு திண்டாட்டந்தான், இனிமேல் கவி புனைவதையே விட்டுவிடப் போகிறேன் என்றும் சொல்லிக் கொண்டான் கவிஞன். ஆகாயத்தையும், இயற்கை வனப்பையும் பார்த்துக் கொண்டிருந்த கவிஞனின் கூறிய கண்கள் உலகத்தை நோக்கின. அதில் வாழும் இஸ்லாமிய மக்களைப் பார்த்தன.

தனி அரசுடன் ஆண்ட இனம். தரணிப் புகழ் வீரர்களாய்த் திகழ்ந்த இனம், முஸ்லிம்களென்றால் படையும் பின்னடையும் நிலையிலே இருந்த இனம் அரேபியாவிலிருந்து ஐரோப்பா வரையிலும் முன்னேறிச் சென்று கொண்டிருந்த இஸ்லாம் ஹிமாலயம் தொடுத்து கன்னியா குமரிவரை கீர்த்தி பிரதாபத்துடன் விளங்கிய இஸ்லாம். இஸ்லாமிய மக்கள் இன்று நலிவுற்று, நிலைகுலைந்து நெஞ்சங் கலங்கி அடிமைப்பட்டு வாழ்வதைக் கண்டால்......ஆத்திரம் வரத்தானே செய்யும்.

கவிஞனின் மனம் கொதித்தது. ஹிருதயம் வெடித்துவிடும்போலிருந்தது. கண்கள் சிவந்தன. ''அரசுடன் ஆண்ட இனமா இன்று அடிமைப்பட்டு அல்லல்லுற்றுக் கிடக்கின்றது அநீதி, அநியாயம்'' என்று அவன் வாய் முணுமுணுத்தது. அவனை அறியாமலே கவிகள் வெளிவந்தன. காதல் கவிகளல்ல? எல்லாம் புரட்சிக் கவிகள் மக்களின் ஹிருதயத்துள்ளேயே இந்தக் கொதிப்பேற்றுங் கவி. மானத்துடன் வாழ்ந்த மக்களின் உள்ளத்திலே புரட்சிக் கனலை மூட்டுங் கவி......ஆம் அந்தக் கவி யார்?

''எ அறிவாளியே! உன் நாட்டைப்பற்றி சிந்தனை செய். பேராபத்து வர இருக்கிறது. உன் அழிவுபற்றிய சூழ்ச்சிகள்......நடக்கின்றன. என்ன நடக்கிறது? என்ன நடக்கும் என்பதையும் கவனி'' என்று இன்று நடப்பதை அன்றே சொல்லிச் சென்ற டாக்டர் ஸர் முஹம்மத் இக்பால். ஆம்! அந்தக் கவி தான். 1873-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதங்களிலே 22-ந் தேதி பாஞ்சாலத்தைச் சேர்ந்த சிடால் காட்டில் அவதரித்து தனது வாழ்க்கையை தேசப் பணிக்காக, இஸ்லாத்திற்காக செலவிட்ட அந்தப் புண்ணிய கண்ணிய பூமானை எளிதில் மறக்க முடியுமா? கவிஞன் மறைந்தான். ஆனால், கவி மறையவில்லை. உடல் மறைந்தது உண்மை. உள்ளம் மறைய

(540-ஆம் பக்கம் பார்க்க)





# தற்கால உலகமும் முஸ்லிம் வாலிபர்களும்

——:——

(Polgahawela A. L. Mohamed Faleel)

### காலத்தின் அருமை

இவ்வுலகத்தில் சிலர் பணக்காரராகவும், சிலர் கல்வில் மிகச் சிறந்தவராகவும், சிலர் கல்வி அறிவே இல்லாத முழு மூடராகவும், சிலர் தேக வலிமை உடையவராகவும், சிலர் அஃது இல்லாத நோயாளராகவும், இருப்பதை நாம் காண்கிறோம் அல்லவா? இவற்றிற்கெல்லாம் காரணம் என்ன என்பதை நாம் ஆராய்ந்து பார்ப்போமானல், காலத்தின் அருமையை உணர்ந்து அதைச் சரியான முறையில் உபயோகிப்பது, அப்படிச் செய்யாமையுமே யாகும் என்பது நமக்குத் தெரியவரும்



A. L முஹம்மது பளீல்

காலம் என்பது பலர் எண்ணுவதுபோல சாதாரணமானது அன்று. அது பொன்னையும், மணியையும்விடமேலானது என்றே சொல்லலாம். காலத்தின் பகுதியாகிய ஒவ்வொரு நொடிப்பொழுதும் நம்மால்மிகவும் போற்றத் தகுந்தது ஆகும். காலத்தை அவமதிப்பவன் எவனும் இவ்வுலகத்தில் ஒருவிதபலனையும் அடையமாட்டான் என்பது முக்காலும் உண்மை. தேனீக்களைப் பார்த்தால், அவை இடைவிடாமல் உழைத்துத் துளித் துளியாக ஒவ்வொரு பூவிலும் உள்ள தேனை சேகரித்து, அத்தேனை அதற்காகக் கஷ்டப்பட்டுக் கட்டப்பட்ட கூட்டில் சேர்த்துவைப்பதை நாம் அறிடலாம். அந்த அற்ப ஈக்களால் முயன்று தேடப்பட்ட தேன் நமக்கு எவ்வளவு பயன் தரத்தகுந்த பொருளாக இருக்கிறது! அற்ப ஈக்கள் காலத்தை வீணாக்காமல் உழைப்பதால் தமக்கும் பிறருக்கும் நன்மையை உண்டாக்குகின்றனவே! ஆறு அறிவு படைத்த மனிதராகிய நாம் காலத்தை எவ்வளவு போற்றிப் பயன்படச் செய்துகொள்ளவேண்டும் என்பதை அறிந்து அதன்படி நடக்க வேண்டாமா? நாம் நம்முடைய வாழ்க்கையில் பயன்படுத்தாமல் கழித்து விட்ட காலத்தை மறுபடியும் அடைய முடியுமா? அணைகடந்த வெள்ளம் அழுதாலும் வாராது என்னும் பழமொழிக்கு ஏற்றபடி கழிந்த காலம் நாம் வருந்தி அழைத்தாலும் வாராது போனது போனதுதான். சிலர் வீணில் தமது வாழ்நாளில் பெரும் பகுதியைப் போக்கி விடுகின்றனர்; பின்பு அருமையான ஒரு காரியத்தைச் செய்யத் தொடங்கி அதைச் செய்து முடிக்கக் காலம் போதாமையால், ஐயோ! நாம் மோசம் போனேமே! முன்னமே நமக்கு இதைப்பற்றித் தெரியாமல் போயிற்றே! என்று எங்கி நிற்டதை நம்மில் சிலர் காண்கிறோம் அல்லவா? ஆகையினல் நாம் ஒவ்வொரு நொடிப்பொழுதையும் பொன்னைப்போல போற்றி பயன்படுத்திக் கொள்ள நம் இளமைப் பருவத்திலிருந்தே பழகி வரவேண்டும் ஒருவன் தினந்தோறும் பதினைந்து நிமிஷம் கவனத்தோடு கல்வி கற்று வருவானுனல் அவன் எந்தத் துறையில் கற்கிறனே, அந்தத் துறையில் பதினைந்து வருஷங்களில் சிறந்த பண்டிதனுக விளங்குவான்' என்று ஒரு பெரிய ஆங்கில அறிஞர் சொல்லி இருக்கிறார் இவ்வுலகில் ஒவ்வொரு துறையிலும் புகழடைந்த மேதாவிகள் காலத்தைச் சரியான முறையில் பயன்படுத்தினவர்களே என்

———

(539-ஆம் பக்கத் தொடர்)

வில்லை. பூத உடலும், புகழும் பாகப் புகழப்படுகிறதே?

1938-ஆம் ஆண்டு ஏப்ரல் 21-ஆந் தேதி வியாழக்கிழமை தனது 62-ஆம் வயதில் அவன் நீத்த (இன்னலில்லாஹி......) உணர்ச்சியை ஊட்டிய உத்தமன் உலகம் உய்யவழி வகுத்த சத்தியம். மக்களின் பரிதாப நிலையைப் பார்த்து சித்தங் கலங்கி, மெய் நொந்து கண்ணீர் வடித்த அந்த கவிஞன், டாக்டர் ஸர் முஹம்மத் இக்பால் தினம் எங்கும் கொண்டாடுக! அவர் ஆத்மா சாந்தியடைக.



பது அவர்கள் வாழ்க்கைச் சரித்திரத்தை வாசிப்பவர்களுக்கு உள்ளங்கை நெல்லிக்கனி போல் நன்கு விளங்கும்.

வாலிபர்களில் சிலர் தம் பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயர்கள் சொல்லிக் கொடுக்கும் பாடங்களை அப்போதைக்கப்போதே நன்முய்ப் படித்து மனத்தில் அமைத்துக் கொள்வதில்லை. 'இன்றைய பாடத்தையும், நாளைய பாடத்தையும் சேர்த்து நாளைக்குப் படித்துக் கொள்ளலாம்' என்று எண்ணுகின்றனர். அப்படிச் செய்வது பெருந்தவறே ஆகும். நாளை என்பது என்றும் இல்லை என்பதற்குச் சமானம் என்றே சொல்லலாம். நாள் வாரமாகவும், வாரம் மாதமாகவும், மாதம் வருடமாகவும் விரைந்து ஓடி மறைவதை நாம் காண்கிறோம் அல்லவா? ஆகையால், இன்றைக்குச் செய்ய வேண்டிய ஒரு வேலையை நாளைக்குச் செய்து கொள்ளலாம் என்று ஒருபோதும் விட்டு வைத்தல் கூடாது. நாள்தோறும் தன் பாடங்களை நன்ருகப் படித்து மனத்தில் அமைத்துக் கொள்ளுகிற வாலிபன் எவனும் தன் பரீட்சையில் தவறமாட்டான் என்பது உண்மை.

சிலர் எங்களுக்கு இதைச் செய்ய நேரமில்லை, என்று காலத்தின் மேல் குறைகூறுவது வழக்கம். அப்படிச் சொல்லுகிறவர்கள் காலத்துக்குத் தகுந்தபடி வகுத்து கொண்டு எந்தக் காரியத்தை எந்தக் காலத்திலே செய்ய வேண்டுமோ அந்தக் காரியத்தை அந்த காலத்தில் செய்யப் பழகாதவரே யாவர் என்பதை நாம் ஒருபோதும் மறந்துவிடக் கூடாது.

### எதிர்காலமும் வாலிபர்களும்

முஸ்லிம் வாலிபர்களும், எதிர் காலமும் என்ற தலையின் கீழ் ஒரு கட்டுரை எழுத விழைந்தமைக்குக் காரணம் என்னவென்று முஸ்லிம் வாலிப உலகமும் கடாவலாம். தற்கால முஸ்லிம் யுவர்களின் நிலையை எண்ணுமிடத்து எதிர்கால நிலையும் இப்படி இருந்தால் எப்படி நம் சமூகம் முன்னேற்றமடைய முடியும் என்ற ஐயப்படுகிறோம். தற்கால யுவர்கள்தான் எதிர்கால தலைவர்கள் என்ற உண்மை அவாவரும் அறிந்ததே. ஆதலால், அதனைப்பற்றி விவாதிக்க வேண்டியதில்லை. பின் தற்கால நம் சமூக நிலைதான் என்ன என்பதை ஆராய்வோம். இன்று நம் சமூகம் எல்லாத் துறைகளிலும் பிற்போக்கான நிலையில் இருக்கிறது. இருந்துவருவது கண்கூடு. அரசியல், சமூகம், பொருளாதாரம், கல்வி முதலிய துறைகளில் நாம் மிக மிக பிற்போக்கான நிலையில் இருக்கிறோம். இதா சமூகங்களை நோக்குமிடத்து நாம் வெட்கித் தலை குனிய வேண்டியதுதான்.

மனிதன் மனிதனுக வாழ்வதற்கு உதவி துணை செய்வது கல்வி வருந்தத் தக்க இந்த இலங்கையில் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் மிகச் சிலரே. பொதுவாய் இலங்கை மக்களின் நிலையே இப்படி இருக்கும்பொழுது நம் சமூக மக்கள் இத்துறையில் மிக விரைவில் முன்னேற்றப் பாதையில் காரென கடிந்து செல்லுங்கால் ஏனே நாம் மட்டும் ஆமை வேகத்தில் அசைந்து நடக்கிறோம். வாலிபர் வருங்காலத்தின் கடமை என்ன? ஒவ்வொரு வாலிபர் தங்கள் தங்கள் முன்னேற்றத்துக்காக நிர்மாணத் திட்டத்தை வகுத்து வேலை செய்கின்றனர் காலஞானம், அரசியல், பொளாதாரம் அனைத்திலும் முன்னேற உழைக்கின்றனர் வாலிபர்களாகிய நாம் இனித் தூங்கிக் கொண்டிருப்பதில் ஒருகாலும் பயன் ஏற்படப்போவதில்லை.

### வாலிபர் வேற்றுமை

நிற்க ஒவ்வொரு வாலிபர்களும் தன்னை ஒரு வருங்கால வீரனுக மதித்து நடக்கதாய் தந்தைகள் உதவி புரிய வேண்டுகிறோம் நமக்குள் வேற்றுமை பொதுவாக இலங்கையில் சோனகர் என்றும் முஸ்லிம் என்றும் கோட்பாடுகிறது இந்த வேற்றுமைகளை ஒழித்து இலங்கையானலும் சரி இந்தியாரானலும் சரி ஒரே இனத்தார் என்பதை உணர வேண்டும் இவ்வித வேற்றுமைகளுக்கு பொதுவாக கல்வி அறிவின்மையே காரணம் ஆதலினல் முஸ்லிம் வாலிபர்களை குறிப்பாகப் படித்த பெரியோர்களே வாலிபர்களே உங்கள் கடமையை உணருங்கள் உங்களைப் போன்ற ஏழை சகோதர்களை மதித்து அன்னவர்களின் முன்னேற்றத்திற்காக பாடுபடுங்கள் கடந்த காலங்களை மனதில் வைத்து வருங்காலத்தை சிந்தித்து பாருங்கள். ஒரு சிலர் மாத்திரம் கற்றறிந்து விட்டதினல் தாம் பெரியோருகிவிட முடியாது என்பதை உணருங்கள். ஏழைகளையும் உங்களோடு கைகோர்த்து அழையுங்கள் தன் சமூக முன்னேற்றத்திற்காக பாடுபடும் ஒவ்வொரு வாலிபனும் வருங்காலத்தில் அவர்களுக்கு தலைமை வகிப்பான். கிஞ்சிற்றும் ஐயம் வேண்டாம். தாற்கால உலகில் ஒரு வாலிபன் பணம் படைத்தவனுக இருந்து சற்று படித்து ஆங்கிலம் பேச முற்பட்டு விட்டால் தன் சுய பாஷையாகி தமிழை புறக்கணித்து சுய

பாஷையில் பேசுவது அநாகரீகம் என கருதுகிறேன். அது மட்டுமல்ல ஆங்கிலம்; படிக்கவில்லை என்ற ஒரே குற்றத்திற்காக முட்டாள் என்று பேசவும் முற்பட்டு விடுகிறார்கள் இப்படிபட்ட அனேக வாலிபர்களை நாம் நமது கண் முன்னே பார்க்கிறோம் அவர்கள் அதனால் வரும் தீங்கை கிஞ்சிற்றும் நினைத்து பார்ப்பதில்லை.! இவர்கள் இவ்வழியில் சென்றால் பொறுமையையும் ஏழை மக்களின் அலட்சியான பார்வையையும் பெறுவார்கள் இதை உணர்ந்து வாலிபர்களாகிய நாம் நடந்து வருங்காலத்தை நோக்கி முன்னேறுவோம். இதைவிட்டு சுயநலம் பெரிதென கருதுவோமாகில் நாம் உய்யவழி யேது?

## முன் காலத்தின் அருமை

இன்றையதினம் நம் முஸ்லிம் சமூகம் எத்துணை பிற்போக்கடைந்து இருக்கிறது என்பதை நன்காராய்ந்து நோக்கி மதப்பற்றுள்ள எந்த முஸ்லிமின் உள்ளமும் துடிக்காமலிராது. இஸ்லாம் என்றாலே உலகம் கிடுகிடுவென ஆட ஆரம்பித்துக் கொண்டிருந்தார்கள். சுருக்கக் கூறுமிடத்தில் இஸ்லாமியர்கள் 950 ஆண்டுகளுக்குமுன் ஆளுந்தன்மையுடைய அரசாட்சி புரியும் வர்கத்தினர்களாக திகழ்ந்து கொண்டிருந்தார்கள். இன்றோ! இஸ்லாமிய மக்கட்கு மதபக்தி குன்றி இஸ்லாமிய கலை சட்டம் நாகரீகம் ஆகியவைகளுக்கு புறம்பாக பிற சமூகத்தின் கொள்கைகளை அனுஷ்டிப்பவர்களாயிருக்கின்றார்கள். இதனாற்றான் சகலகண்ணியம் அதிகாரம் ஆகிய வற்றை துறந்து ஆளப்படும் குழுவினர்களாக விளங்குகின்றோம். இத்தகையமோசகரமான நிலைமையிலுங்கூட முஸ்லிம்கள் தங்கள் தங்கள் சுயநலத்தைக் கருதி சமூக ஊழியம் பொதுநலத்தொண்டு மார்கசேவை ஆகிய பொன்னான கைங்கரியத்தில் தலையிடாதவர்களாயிருக்கின்றார்கள்.

உலகமே நாகரீக அந்தகாரத்தில் மூழ்கி இருந்த காலத்தில் இஸ்லாமியர்கள் நாகரீக ஆதவனை இவ்வுலகிற்கு அளித்தாரென்பதை சரித்திரம் கூறும். அப்படிப்பட்ட மரபில் தோன்றிய நாம் இன்று இருக்கும் நிலைமை நோக்குழி கண்ணீர் வடிக்காமலிருக்க முடியாது.

## வாலிபர் முன்னேற்ற சங்கம்

இன்று நமது இலங்கையில் இருவித சங்கங்களின் பெயர் முஸ்லிம் சங்கம் என்றும் மற்றது சோனகர் சங்கம் என்றும் நடாத்துக்கொண்டு வருகிறது. இது போல நாமும் நமது இலங்கையில் வாலிபர் முன்னேற்ற சங்கம் என்று பெயர் வைத்துக் கொண்டு சங்கத்தை ஸ்தாபிதம் செய்வோம்.

ஏ வாலிபர்களே! என் இந்த உறக்கம்!! பிறர் சமூகத்தை சீர்தூக்கிப் பார்க்கில் தங்கள் தங்களை தற்காப்பு செய்துக் கொள்வதுமின்றி சமூகக் கட்டுப்பாடு, ஜாதிக் கட்டுப்பாடு, பொது ஊழியம் ஆகியவைகளில் தலைசிறந்து விளங்குவதுடன் இஸ்லாமியத்தையே ஒழிக்கவும் முற்பட்டு விட்டார்கள். அதற்கான திட்டங்களைத் தயாரிக்க தலைவர்கள் ஒன்று சேர்ந்து துரிதமாக வேலை செய்து வருகிறார்களென்பது கண்கூடான விஷயம். நேயர்களே! நமது ஹிருதயம் என்னும் பட்டணத்தில் சிந்தனை என்னும் சவாரிமீதமர்ந்து சிறிது நகர் சோதனை செய்துப் பாருங்கள்!! இதனால்தான் நம் சமூகத்தைக் கட்டுப்படுத்த வேண்டும். சிதைந்த இஸ்லாமிய மக்களை ஒன்றுபடுத்த வேண்டும். உண்மை மதாபிமானிகளாக ஜ்வலிக்க வேண்டும். சகல நற்கிரியைகளிலும் நம் முன்னணியில் நிற்க வேண்டும் என்னும் நந்நோக்கத்துடன் நமது காயிதே அஃலம் ஜனாப் ஜின்னாஹ் அவர்கள் இன்று ஒரு பெருத்த முஸ்லிம் சமுதாயத்தை நிலைநாட்டி யிருக்கிறார்கள். ஆகவே, நாம் மேற் சொன்னபடி நம் முஸ்லிம சமூகம் முற்காலத்தில் கொண்டிருந்த கண்ணியத்தை திரும்பவும் பெறவேண்டுமானால் அதற்கு ஒவ்வொரு கிராமங்களிலும் தனிப்பட்ட வாலிபர் முன்னேற்றச் சங்கம் அவசியம் என்பதை யான் பகராமலே தெற்றென விளங்குவதுடன் மேலே நமது (திரு குர்ஆன்) போதனை இடி முழக்கம் செய்வதையும் கவனியுங்கள்.

ஏ வாலிபர்களே! உங்களூரில் வாலிபர் முன்னேற்றச் சங்கங்கள் இருக்கின்றனவா? இல்லாவிட்டால் இன்றே ஸ்தாபிதம் செய்யுங்கள். நியாயமான சட்ட திட்டங்களை ஏற்படுத்துங்கள். நெறி தவறாமல் நடத்தையை கடைப்பிடியுங்கள். சில நகர்களில் பல சங்கங்கள் ஏற்பட்டு சிறிது நாட்களிலேயே அழிந்து போவதுபோல் விட்டுவிடாமல் எவ்வித ஹானி விளைவிக்க விடாமலும் அதில் பணி செய்யும் தொண்டர்களுக்கு தக்க ஆர்வத்தை யூட்டுங்கள். இதுவே நம் சமூக முற்போக்கின் ஆயதம் வாலிபர் முன்னேற்றச் சங்கம்.

—:—

# தெய்வீக தியானத்தில் தென்படும் தெவிட்டாத ஆனந்தம்



(ஹன்வல்ல M. H. M. S. முஹம்மத் பளீல்)

தேவதூதர்களாம் கோடிக்கணக்கான மலாயி கத்துகளெனும் ஒளி வடிவினரும், தீர்கதரிசிகளாம் திருமறையை உலகோர் குபதேசித்த ஒரு லட்சத்து இருபத்து நான் காயிரம் றசூல் மார்களெனும், மானிட சிரேஷ்ட மகான்களும், தீதார் என்னும் தேஜோ மயமான திவ்ய லாகிரியிலே மலரின் மதுவைத் தேடி நுகரும் வண்டை நிகர்க்க தினசரி அல்லென்ன பகற் பொழுதென்ன அறுபது நாழிகையும், அதே தேட்டம் என்றிருக்கும் வேதாந்த சித்தாந்த விழுமிய விளக்கம் கண்ட ஆரிபீன்கள் முதலான ஆத்மீக பக்திப் பரசவஸ்தரான முக்தர்களும், தேடற்கரிய திரவியம் தித்திக்கும் தீம் பானம் தெவிட்டாத ஆனந்தம் என்று ஏகோபித்து ஒரே வாக்காகத் தியான மகாத்மியத்தைப் பற்றிக் கூறுகின்றார்களாயின் பாமாலிய ஜனங்களான நாமும் நமது சக்தியின் மட்டாக சர்வசக்தி வாய்ந்த அவ் சத்திய ஜோதியின் தியானத்தில், ஒரு சில நிமிஷங்களேனும் திளைக்கத் தயங்குவதேன்!

பாரபரன் றப்புல் ஆலமீன் லௌகீக பாச பந்தங்களின் லாகிரியிலே பரிபூர்ணமாக ஈர்க்கப்பட்டு பணவாசையின் பரிகார சக்குவங்களிலே பகலையும் இரவையும் செலவழிக்கும் பயன்தரா வாழ்க்கையை பாரமார்திகப் பசையற்ற வாழ்க்கையை விரும்புகின்றான் அல்லன்!

## வணக்கங்களில் தியான இணக்கம்

இஸ்லாமிய அனுஷ்டானங்களின் இணையற்ற தத்துவம்தான் என்னே! வாழ்ந்து சிந்திப்போமாயின் சரியான இஸ்லாமிய னொருவனின் உண்பது உடுப்பது உறங்குவது முதலான பல் திறப்பட்ட காரியாதிகளிலும் கருணாகரன் அல்லாஹ்வின் ஞாபகம் விகஜிதமாவதை பரிசுத்த தெய்வீக மணம் கமழ்வதைக் காணலாம். என் அவ்வளவு தொலைவில் யோசிக்கவேண்டும் கட்டாய வணக்கமான தினசரி அத்யாவஸ்யத் தேவையான தொழுகையின் ஒரு சில நிமிஷங்களும் தெய்வீக தியான மயமானவன்றோ. இருபத்திநான்கு மணி நேரங்களையும், இகலோக பாக்கிய போக்கியங்களிலே விரயமாக்கும் எம்மிற் பலர் இடை நடுவே குறித்த வேளையில் ஒரு பத்து நிமிஷங்களையேனும் அதற்காக ஒதுக்காமை (தொழுகையைவிடுதல்) அம்மம்ம! கொடிது!! கொடிது!!!

கொப்பளிப்பது பன்னீர் குடிப்பதோ கூழ் என்றவாறு பால் போன்ற பரிசுத்தஸ்தராய் பகிரங்கத்தில் காட்சி யளிக்கின்றோம். எமக்கு வேலைகளனந்தம் இறைவன் கருணாகரன் நம்மை க்ஷமித்து ஈடேற்றுவான் என்று எமது போலி ஹிருதய தேற்றரவால் மாற்றான் இப்லீசின் நயவஞ்சக போதனையால் மயங்குண்டு இரும்பு தேய்கவும் செய்கின்றோம்.

நன்று! நன்று!! நாழிகை அறுபதும் நமக்காக! நாளொன்றுக்கு மொத்தம் நாழிகை ஒன்றையேனும் நமனுக்காக அர்டனிக்கின்றோ மில்லை.

## அல்லல் மனப் பிணிக்கு ஔஷதம் உண்டா?

ஆனந்த மயமான அற்பப் பொழுதில் தோன்றி மறையும் அவனியாசையிலே சிக்குண்டு அநவரதமும் அல்லாஹ் ஒருவன் இருக்கின்றான். அவனுக்கு அடியேம் ஆற்ற வேண்டிய அரும் பணிகள் நியம நிஷ்டைகள் அநேகமுள! என்பதை அறிந்தும் அலட்சியமாய் அறியார் போல் இருக்கும் ஆனந்மவாத ஜீவியத்தின் குறுக்கே காரிருளிடையே காட்சியளிக்கும் மின்னொளி யென்ன சம்பவிக்கும் கஷ்ட நிஷ்டூரங்கள் நோய் நொடிகள். இன்ப துன்பங்கள் பகைவரின் தாக்குதல்கள் ஆண்டவனிடம் ஆருதவி விண்ணப்பங் கோரும் தெய்வாபயஸ்தனாகச் செய்யும் நிலைக்கு நம்மை வலிய கொணர்ந்து விடுகின்றது. அதன் காரணமாக ஆத்மீக ஞானிகள் அவ்வித சந்தர்பங்கள் நிகழ்வதை பெரிதும் ஆசியா நிற்பர்.

ஆம்! உண்மையில் அவ்வித சந்தர்பங்கள் நமது ஜீவியத்தில் நமக்கு உவந்தளிக்கப்பட்ட வரப்பிரசாதமாகும்.

மன்னாதி மன்னரும் மண்டியிட்டுச் சிரம் தாழ்த்தும் அகில லோக சிருஷ்டிகர்த்தனை

ஆண்டவன் றப்புல் ஆலமீன் மாயையில் மூழ்கி மதிமயங்கி வெற்று ஜீவிய ஸ்தான மானிட கோடிகள் மாட்டிரங்கி மனமுடிந்த ஹிருதய ரோகஸ்தருக்கு தேறுதல் நண்டன் போன்று பிரஸ்தாப சந்தர்ப்பங்களில் சமய சஞ்சீவியாக வேத மொழி வாக்கியங்களையும், திருநபி (ஸல்) அவர்கள் போதனைகளையும், ஸஹாபாக்கள் தாபயீன்கள் இமாம்கள் அவ்லியாக்கள் முதலான ஆன்றோர்தம் அனுஷ்டானச் சிறப்புகளையும், அவற்றால் சாந்தமுனும் மணந்தேறுதல் பெறும் அரும் பெரும் மார்க்கங்களையும், நொந்தலறும் ஹிருதய மலரில் சிந்தனை இதழ்களாகத் தந்து உதவுகின்றான். பிரஸ்தாப பொருளைப் பூரணமாக மெய்ஞ் ஞானிகள் பயன் படுத்திக் கொள்வர்.

**ஆரிபீன்கள் கண்ட ஆத்மீக திரவியம்**

ஆத்மீக அமிர்தத்தை அள்ளிப் பருகுவோம் வாரீர்! பரவச மடைவோம் வாரீர்!! பரமன் தியானத்தில், ஆனந்த சாகரத்தில் அமிழ்ந்துவோம் வாரீர்!!! அல்லாஹ்வெனும் ஒப்பற்ற ஆரவாரத்தில்.

பரமன் சிந்தனையிலே அவனது திருவருளையே அருமந்த பிரதம குறிக்கோளாய் கைமாறாய்க் கொண்டு அவனது ஆத்மீக ஆகர்ண அன்பு மயமான பேரொளியில் தம் ஹிருதய கமலங்களை இரண்டறக் கலக்கச் செய்யும் ஆசிகீன்கள் பண சம்பந்தத்தால் எக்கணமும் பிணைக்கப்பட்டாரேனும், பந்து மித்திரர்களுடன் பழகினாரேனும், பத்தினியுடன் குலாவினாரேனும், தீஞ்சுவைப் பான வகைகளைப் பருகினாரேனும், பழ வகை பட்சணாதியவற்றை அருந்தினாரேனும், இன்னோரனைய பல்வேறு லோகாயத பாச பந்தங்களில் உழன்றாரேனும், மானிட உருவெடுத்தின் மாண்புறு லட்சியமான தெய்வீக தியானச் சிந்தனையை ஒரு போதும் அலட்சிய திருஷ்டியில் அலுப்பு மனப்பான்மையில் நோக்குவார் அல்லர்.

முகக்கண் இருந்தும் லௌகீக வாழ்விலே அதன் மோகத்திலே தாமரை இலைத் தண்ணீர்போல் அளவு மீறாது ஈடுபட்டு தமது அகக்கண்ணையே அறிவின் புலனையே அபரிமிதமாக முக்க முழக்கப் பிரயோகிக்கும் முத்தர்கள், முத்தகீன்கள் முதலாயினோர் சாமானிய கற்களிடை ஒழித்து மறைந்து கிடக்கும் விலையேறப் பெற்ற இரத்தினக் கற்களை போன்று பாமர ஜனங்களிடையே நடமாடத்தான் செய்கின்றனர். அருண்டவன் கண்களுக்கு இருண்டதெல்லாம் கார் நிறமாகக் காட்சியளிப்பதே போல் அறிஞர் அல்லாத மற்றார்க்கு அவர்கள் தோற்றுவது அருமை. கற்றாரைக் காமுறுவுவார் கற்றாரே யன்றி ஏனைய மற்றார் யாங்ஙனம்! நித்திய பெரும் பேறான நிகரற்ற அப்பேரை நாம் பெற முயல்வோம். ஆம்! நிச்சயம் பெறத்தான் வேண்டும். மனிதனுக்கு அவன் முயற்சித்ததைத் தவிர வேறொன்றில்லை என்று மறைமொழியான இறை மொழி வாக்கியம் கூறுகின்றதன்றோ!

## சந்தா சோதரர்கள் கவனிக்க!

பின்கண்டசந்தா எண்ணுள்ள சோதர்களின் சந்தாத்தொகை 1946௵ செப்டம்பர்௴டன் முடிவுறுகின்றது. இன்னார்களில் மீலாத் மலருக்காகத் தனியாக ரூ. 0-8-0 அனுப்பியவர்கள், ஆண்டுச் சந்தா மட்டும் ரூ. 3-8-0-யும், மலருக்குப் பணம் அனுப்பாதவர்கள் மீலாத் மலர்க் கிரயம் உட்பட ரூ. 4-0-0-யும் அனுப்பி, எமக்குப் போதரவு நல்குமாறு வேண்டுகின்றோம்.

A-216; 317; 318; 324; 481; 482; 484; 486; 488; 489. B-27; 28; 29; 38. H-130. I-40. J-30. M-193; 420; 421; 422; 425; 427; 638; 640; 642; 643; 644; 645; 646; 647; 648; 649; 656. N-39; 40; 68. O-15; 16. P-51. R-22. S-76; 266; 267, 269; 270; 272; 273; 321; 446; 447; 449; 450.

**கவனிப்பு:—**

மேற்கண்ட சந்தா சோதரர்கள், தங்கள் சந்தாக்களை 1-9-46-க்குள் நமக்குச் சேருமாறு அனுப்பாவிடில், அடுத்த செப்டம்பர்௴ மாசிகையை வீ. பீ. மூலம் அனுப்பிவைக்க நேரிடுமென்பதை அறிவித்துக்கொள்ளுகிறோம். தாங்களே மணியார்டர் செய்தால் மணியார்டர் கமிஷன் 0-2-0 அணாவோடு போகும். நாம் வீ. பீ. செய்தால் 0-8-0 அணா கூடும். சந்தா நேயர்கள் பணம் வீணாக வேண்டாம். சந்தா எண்கள், மாசிகையின்மீது சுற்றப்படும் விலாச ராப்பரின் இடதுபுறக் கோடியில் குறிக்கப்பட்டுள்ளன.

— நூ. இ. மானேஜர்.



# உத்தேசமான ஹஜ் பிரயாணச் செலவு

—:—

காமன்வெல்த் ரிலேஷன்ஸ் டிபார்ட்மெண்டார் அடியிற்கண்ட செய்திகளை ஹஜ் பிரயாணிகளுக்கு அளிக்கின்றனர் :—ஒரு நபருக்கு ஹஜ் யாத்திரை செய்ய மதீனாவுக்குப் போய் வருவது உள்பட மொத்தச் செலவு எவ்வளவு என்பது முடிவாகத் தீர்மானிக்கப் பட்டுள்ளது :—

| | ரம்ஜான் பெருநாளுக்கு முன் | ரம்ஜான் பெருநாளுக்குப் பின் |
|---|---|---|
| டெக் யாத்ரீகர்கள் - ஜித்தாவில் ஒட்டை அல்லது லாரியில் பிரயாணம் செய்ய | ரூ. 2340 முதல் ரூ. 2425 வரை. | ரூ. 1678 முதல் ரூ. 1759 வரை. |
| டெக் யாத்ரீகர்கள் - முதல் வகுப்பு பஸ்களில் பிரயாணம் செய்ய | ரூ. 3900/ | ரூ. 2850/ |
| 2-வது வகுப்பு யாத்ரீகர்கள் - ஜித்தாவில் முதல் வகுப்பு பஸ்களில் பிரயாணம் செய்ய | இரண்டாவது வகுப்பு இல்லை. | ரூ. 2975/ |
| முதல் வகுப்பு யாத்ரீகர்கள் - உயர்ந்த ஸ்பெஷல் கார்களில் பிரயாணம் செய்ய | ரூ. 5600/ | ரூ. 3935/ |

இந்தத் தொகைகள் உத்தேசமானவைகள் ; அவரவர்கள் வாழ்க்கைக்குத் தரத்துக்கொப்ப மாறவும் கூடும். மேர்கண்ட செலவுகளுக்கு விபரமாவது :—

## மாற்ற முடியாத செலவுகள்.

1. போகவர ஸ்டீமர் (கப்பல்) செலவும் சாப்பாட்டுச் செலவும் :

| | டெக் | | 2-வது வகுப்பு | | முதல் வகுப்பு | |
|---|---|---|---|---|---|---|
| | கப்பல் கட்டணம் | சாப்பாடு சார்ஜ். | கப்பல் கட்டணம் | சாப்பாடு சார்ஜ். | கப்பல் கட்டணம் | சாப்பாடு சார்ஜ். |
| கராச்சி — ஜித்தா | ரூ. 225 | 50 | 525 | 150 | 800 | 150 |
| பம்பாய் — ஜித்தா | ரூ. 225 | 60 | பம்பாயிலிருந்து 2-வது வகுப்பு இல்லை. | | 800 | 175 |

கல்கத்தா — ஜித்தா — திரும்ப பம்பாய் கட்டணங்கள் பிறகு தெரிவிக்கப்படும்.

2. கமரான் குவாரன்டைன் கட்டணம் :

ரூ. 8/ 8/ 8/

3. சவூதி அரபு கவர்ன்மெண்ட் வசூல் செய்யும் கட்டணமும், போர்ட் சார்ஜும் (இதைக் கப்பல் கம்பெனியே வசூலித்துவிடுகிறது.)

ரூ. 66–10–8. 66–10–8. 66–10–8.

சவூதி அரபு கவர்ன்மெண்டாருக்குச் சேர வேண்டியவற்றை முதவ்விப் (யாத்ரீகர்களின் வழிகாட்டி) உள்பட மற்ற இதர அவசியமான வரிகளும், ஜித்தா இறங்கினதும் எந்த வகுப்பு யாத்திரீகராயிருந்தாலும் ஒவ்வொருவரிடமிருந்தும் முதவ்விப்களால் உடனே வசூலிக்கப்படும் தொகை. ரூ. 468-8-0.

## சாமான்களைக் கொண்டுபோக சார்ஜுகள்

| | ஒட்டை மூலம் | 3-வது வகுப்பு லாரி | 2-வது வகுப்பு லாரி | பஸ் | ஸ்பெஷல் கார் |
|---|---|---|---|---|---|
| (a) ஜித்தா-மக்கா (போகவர) | 18/6 | 20/ | 26/12 | 40/ | 80/ |
| (b) மக்கா-மிஞ-அரபாத் (போகவர) | 20/ | 33/4 | 40/ | 60/ | 120/ |
| (c) ஜித்தா-மதீஞ (போகவர) | 66/12 | 80/ | 106/12 | 160/ | 320/ |

குறிப்பு :—ஜித்தா - மக்காவுக்கு மட்டும் அல்லது வர போக மட்டும் தனி சார்ஜ் உண்டு; அதாவது போகவர உற்ற சார்ஜில் பாதி. காலடியாக நடக்க மக்கா முதல் அரபாத் வரையில்தான் அனுமதிக்கப்படும்.

## இதர செலவுகள்

| | | டெக் | 2-வது வகுப்பு | முதல் வகுப்பு |
|---|---|---|---|---|
| (1) | யாத்திரைக்கு முன்னேற்பாட்டுச் செலவுகள், ரயில் செலவுகள் முதலியன சுமாராக | ரூ. 75/ | 125/ | 200/ |
| (2) | ரம்ஜானுக்கு முன்பே போய்த் தங்க விரும்பிஞல், 4 மாதங்கள் தங்கள் செலவு சுமார் | ரூ. 1333/ | 2666/ | 3333/ |
| (3) | ரம்ஜானுக்குப் பின் 2 மாதம் தங்க சுமார் | ரூ. 666/8 | 1333/ | 1666/8 |

மேற்கண்ட செலவுகள் சாப்பாடு, இடவசதி, ஆட்டுக்குர்பானி, தருமச் செலவு முதலியன. ரம்ஜானுக்கு முன் வரும் யாத்ரீகர்களுக்கு தானியம், சர்க்கரை கொண்டுவர அனுமதியுண்டாகையால் செலவு குறையலாம். இந்தச் செலவுகளும் அவரவர் வாழ்க்கைத் தரத்துக்கொப்ப மாறும்.





# ஓடும் ரயிலில்

(கீழக்கரை M. A. M. செய்யிது முஹம்மது)

### அபாய அறிகுறிகள் !

துள்ளின மாடு பொதி சுமக்கும் என்பதிற்கு கொப்ப சமீபத்தில் நேசதேசத்தவர்களால் தோற்கடிக்கப்பட்ட ஜப்பானியர்கள் கடந்த 4, 5 வருஷங்களுக்கு முன்னர், யுத்தம் தமது கோரங்களை பதித்துக் கொண்டிருந்தது. அது சமயத்திலே! ஜப்பானியர்களால் இலங்கைக்கு ஆபத்து எர்படலாம். என்ற இலங்கை அரசாங்கத்தினரின் அபாய அறிக்கைகள், "Stick No Bills" என்ற விடங்களிலெல்லாம் காட்சியளித்தன! அது சமயத்திலே அரசாங்கத்தினர் இலங்கையினர்களின் பாதுக்காப்பிற்காக பலமாக்கான் முயற்சிகளில் தீவிரமாக முனைந்திருந்தனர் ! அதுபோல் எங்கள் கடைக்கு அடுத்த அடுத்தார்போல் விபாபாரம் செய்துவந்த பல இந்தியர்கள் ஸ்டாக்கிலிருந்த சரக்குகளை ஒன்றுக்கு அரைவீதம் விற்று பணம் திரட்டும் வேலையில் தீவிரமாக முனைந்திருந்தனர்! பின்னர் தினே, தினே அவரவர்களின் வியபார ஸ்தலங்களை மூடிவிட்டு பிறந்தகத்திற்கு பிரயாணமாகிக் கொண்டிருந்தனர்! இதையறிந்த நான் என்ன செய்வதென்றென்று ஒன்றும் தோன்றுமல் வீற்றிருக்கையில் எம்மையும் அங்ஙனம் செய்து பிறந்தகத்திற்கு புறப்படும்படி கூறினர்கள்! நண்பர்களின் கூற்றுகளையும், பத்திரிகை கூற்றுகளையும் சிந்தித்தவாறே வீற்றிருக்கையில்டங்! என மணி ஒன்றடித்தது! படுக்கையும் எனது வருகையை வெகு ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தன! உறக்கம் வந்தால்தானே! எவ்வளவு நேரம் வரைதான் கண் அயராமலிருக்க முடியும்? கடைசியாக, கடையை மூடிவிட்டு பிறந்தகத்திற்கே போய் விடுவோமென்பது என் முடிவு.

### மறுநாள் !

பொழுது விடிந்ததும் அன்றையக் காலைக் கடன்களை முடித்துவிட்டு தனக்குத் தெரிந்த நண்பர்களிடம் சாமான்களனைத்தையும் ஒன்றுக்கு அரைவீதம் விற்று மொத்தமாக பணத்தைப் பெற்றுக் கொண்டு பிறந்தகப் பிரயாணங்களுக்கேற்ப வசதிகளைச் செய்துகொண்டிருந்தேன்! "ரஹீம் சாஹிப்" டெலிகிராம் என்று கூவிக்கொண்டே தபால் பியூன் தந்தியை நீட்டினன். அவ்வளவுதான், நமக்கு தேக அவயவர்கள் தந்தியடிக்கவே அவசரமாகத் தந்தியை உடைத்துப் பார்த்தேன்! அதில் கீழ்கண்டவாரு பிறந்தகத்திலிருந்து தகப்பனால் கூறப்பட்டிருந்தது!

### "வியாபாரத்தை மூடிவிட்டு தாமதமின்றி புறப்படு"

எற்கனவே தகப்பனரின் அனுமதியின்றி அங்கனம் செய்துக் கொண்ட எனக்கு தந்தியைச் சான்றுக வைத்துக் கொண்டேன்! நான்காவது வகுப்ப ஒன்று ரயிலில் இல்லாததின் காரணமாக மூன்ருவது வகுப்பில் பிரயாணம் செய்யும் எமக்கு என்னவோ, பணம் காசியுடன் இரண்டாவது வகுப்பில் பிரயாணம் செய்ய வேண்டுமென்று தோன்றிற்று. அதன்படியே எக காலத்திலேயே ஸ்டேஷனிற்குச் சென்று செகண்டு கிளாஸ் கம்பார்ட்மெண்டில் வீற்றிருந்து கொண்டு; பற்பல மன கோட்டைகள் கட்டினேன்! சற்று தூரத்திலிருந்து ஒன்றன்பின் ஒன்ருக இரு விசில் ஒலிகள் கேட்டு எனது கைக்கடியாரத்தைப் பார்த்தேன்! இரவு மணி எட்டு அடித்து ஐந்து நிமிஷங்களாகிவிட்டது! எனது கைக்கெடியாரப்படி ஐந்து நிமிஷம் தாமதமாகவே அன்று "Fort" ஸ்டேஷனிலிருந்து ரயில் புறப்பட்டது!

### ஓடும் ரயிலில்!

ரயிலோ எக்ஸ்ப்பிரஸ் என்னும் பெயரை நிரூபித்துக் காட்டியது! பிறந்தகப் பிரயாணக் குஷியிலே அருகே வீற்றிருந்த பருக்கு சிகரேட்டை ஒன்றை அவர் கேட்காமலேயே கொடுத்து நான் நெருப்புப் பெட்டி கேட்டு வாங்க வேண்டியதாயிற்று! ரயில். "பொல்கூற வெல" ஸ்டேஷன் வந்து நின்றது! பேச்சித் துணைக்கு வீற்றிருந்த நண்பரும் இறங்கி விட்டார்.

நான் மட்டிலும் தனியே வீற்றிருந்ததைப் பார்த்து அங்குமிங்கும் கையில் ஓர் லெதர் பேர்ஸுடைன் எடுத்துக் கொண்டு திரிந்துக் கொண்டிருந்த ஓர் நவீன யுவதி வந்து ஏறிக் கொண்டாள்! ரயில் புறப்பட்டுவிட்டது.

தற்கால, "நவீன யுவதி"களுக்கு வெட்கம் என்பது மருந்துக்குக்கூட இல்லை எனும் பெரியோர்களின் கூற்றுகளின் கூற்ற. சற்று அருகே வீற்றிருந்த நவீன யுவதியின் உடைபாவனில் தோன்றிற்று. அவளது நவீன முறைகளை கண்ணுறும் எவாத ஹிருதயத்தையும் இலகுவில் கவர்ந்துவிடும். பின்

தர்கால நவீன முறைகளில் குறை கூறுவ
தற்கிடமில்லாத என் போன்ற யுவனின் மன
தைக் கவருவதில் குற்றமில்லைதானே? எனி
னும், நான் முதலில் அவளிடம் பேசவில்லை?
அவளேதான்! ஸார் நீங்கள் எங்கிருக்கிறீர்
கள்? என்ருள்! நான் இப்போது ஓடிக்கொ
ண்டிருக்கும் இண்டோ சிலோன் எக்ஸ்பிர
ஸில் செகண்டு கிளாசில் இருக்கின்றேன்!
என்று குறும்பாக விடையளித்தேன்! அது
தான் தெரிந்ததாயிற்றே! முன்னர்........?
அவள் கூறி முடிப்பதற்குள், ஓஹோ மன்னி
யுங்கள்! கொழும்பு புரக்சோட்டைப் பகுதி
யிலே! அங்குதான் எனது வியாபாரமும்.
எதிர்பாராத விதத்தில் நமது கடையை மூட
வேண்டியதாயிற்று. விற்று முதலான ரூபாய்
ஐம்பதினுயிரத்துடன் பிறந்தகமான "திருச்
சி"க்குப் போகிறேன் என்று எனது மதிப்பை
அவளிடம் தெரிவித்துக் கொண்டேன். அத்
துடன் எங்களது சம்பாஷனை நின்றுவிட்
டது! சற்று நேரம்வரை ஏதோ ஒன்றை சிந்
தித்து முடிவிற்கு வந்தவாறு அவளது முகத்
தோற்றத்தில் தோன்றிற்று! ஹலோ சார்!
இன்றையத் "தினசரி"த் தாளிருந்தால் சற்
றுக் கொடுங்களேன்? என்ருள். நான் என்
னிடமிருந்த ஓர் தினசரியை எடுத்து நீட்டி
னேன்! இடையே பிரதி வாங்கிக் கொண்டு
முன்னர் இருந்த விடத்திற்குச் செல்லாமல்
நமக்குச் சற்று அருகே வீற்றிருந்து கொண்டு
பத்திரிகையில் விசேஷங்களில்லை என்று
சொல்லிக் கொண்டே கொஞ்சங் கொஞ்ச
மாக அருகே நெருங்கிப் பின்னர் என்னமோ,
"காதல்" என்னும் காந்த சக்தியே சற்று
தூரம் வீற்றிருந்தவளை என்னை அறியாமலே
இழுத்து வந்துவிட்டது. உங்களைக் கண்ட
துமே என் ஹிருதயம் உங்களுக்கு அடிமை
யாகிவிட்டது! என்று கணக்கு வழக்கில்லா
மல் அடுக்கிக் கொண்டே போனுள்! முன்
பின் அறியாத ஓர் யுவதி சற்று நேரம் பேசி
யதில் இவளது சாகஸத்தைப் பார்த்து ஆச்
சர்யமும், வியப்பும் கலந்த எனக்கு ரூபாய்
ஐம்பதினுயிரமடங்கிய பர்ஸை நினைத்தும்
தந்தியடிக்கவே! பிரமித்துப் போய் வீற்றி
ருந்தவனை, என்ன சார்! நான் இவ்விடம்
பரிந்துக் கூறுவதை சற்றுக்கூட கவனிக்கா
மல் பதில் பேசாமலிருக்கின்றீர்களே! என்
ருள். ஏது இது ஆசைக் காட்டி மோசம்
செய்யும் சமூகமாகத் தோன்றிற்று. பெண்
ணே! நீ பேசும் வார்த்தைகள் எனக்குக்
கொஞ்சங்கூட பிடிக்கவில்லை! அந்தவிதமான
வார்த்தைகள் பேசுவது உன் போன்றவளுக்
குச் சரியுமல்ல! என்றதுமே, ஏ மாஸ்டர்!
என்ன சொன்னீர்கள்? நான் வியபிசாரி
என்று நினைத்துக் கொண்டா தனிமையாக
வீற்றிருக்கும் என்னிடம் உமது விஷம
ஆவலை நிறைவேற்ற வந்தீர்! இந்த விஷயத்
தை அடுத்தவர்களுக்கு அறிவிக்காமல் உமது
மானத்தைக் காப்பாற்றிக் கொள்வீராஞல்
உமது பணப் பர்ஸ் (ஐம்பதினுயிரம்) ரூபாய்
அடங்கிய பணப் பர்ஸை எனக்கு கொடுத்து
விடும்! இல்லையேல் என்னைப் பலாத்காரத்தி
ஞல் கற்பழித்ததாக, உமது துர்செயலின்
வண்டவாளத்தை அம்பலப்படுத்தி பகிரங்க
மாக மானநஷ்டம் கோரட்டுமா? என்ன
யோசிக்கின்றீர்? ஹூம்! ஜல்தி!! பணப்
பர்ஸை இப்படி கொடும்! என்று எதிர்பா
ராதபடி அபாய அறிவிப்புச் சங்கிலியைப்





...ற்றிக் கொண்டே கூறினுள்! இவளது விய
...த்தமான பதிலைக் கேட்ட எமக்கு சமய சஞ்
...வியாக ஓர் யோசனையுடன், கடுவேகம்
...டும் ரயிலின் சப்தத்திஞல் நீ கூறும் வார்த்
...தைகள் எனக்குக் கேட்கவில்லை. ஆகவே,
...ர் காகிதத்தில் எழுதிக் கொடு என்று கை
...ஞல் சமிக்ஞை செய்து காண்பித்தேன்.
...லை தடுமாறிக் கொண்டே. அவசர அவசர
...ாக ஓர் காகிதத்தில் கீழ்க்கண்டவாறு எழுதி
...ட்டினுள்:—

### அவளது கடிதம் !

...மஸ்காரம் மாஸ்டர் !

... எனது லட்சியக் கொள்கையில் இதுநாள்
...வரை தோல்வியைக் காணுத இந்த, "ரயில்
...வே ரமணி" இடம் ரூபாய் ஐம்பதினுயிர
...டங்கிய பர்ஸை கொடுத்துவிட்டு, "வியா
...பாரி" என்ற மதிப்பை பேணிக்கொள்ளும்!
...இல்லையேல், அடுத்தப் பெட்டியில் வீற்றிற்கும்
...எமது அஸிஸ்டண்ட் மிஸ்டர் ரயில்வே மோ
...ஹனை கூப்பிட்டு பலாத்காரத்திஞல் பணத்
...தைப் பரிப்பதுடன் அவரது, "கத்திக்கும்"
...ரசிப் பார்க்க கட்டாயமாக நேரிடும்! என்
...பதை எச்சரிக்கின்றேன். வந்தனம்!

இங்ஙனம் :
"RAILWAY RAMANI"

... சரிதான்! இவளது பயமுறுத்தலுக்குப்
...பயந்து நான் கொடுத்துவிடவோ, நன்ருய்த்
...தானிருக்கிறது உன்னுடைய கடிதம்! என்று
...எனது வாலிப உணர்ச்சியில் கூறிவிட்டேன்.
...ஹூ! என்ன சொன்னீர்? இல்லை. தருவதில்
...ஒன்றும் ஆட்சேபனை இல்லை! பின்னே ஏன்
...தாமதிக்கிறீர்! ஹூம்!? ஒன்றல்லவா! உமது
...உதவியாளரையும் பார்த்தவிட்டு கொடுத்து
...விடுகிறேன்; என்றதும், புபூய்ய்ய்! என்
...று அவரது வாயில் இரண்டு விரல்களையும்
வைத்துக் கொண்டு க்ஷணமே! டக் என்றும்
சப்தம் கேட்டு திரும்பிப் பார்த்தேன்! வருகி
ருர்! எவர்!? அவர்தான் மிஸ்டர் மோஹன்!
என்று அவரது ஸ்டைலில் ஊகித்துக்
கொண்டேன்! இவர்தான் ஆசாமி!

மிஸ்டர்! "Fifty thosand" என்
ருள் என்னைக் காட்டிக்கொண்டே மிஸ்டர்
மோஹனிடம்! நான் தாமதிக்கவே! இரண்டு
வாங்கிக்கொண்டு அவரது பலாத்காரத்திஞல்
பர்ஸ் அவரது கைமாரவே! நான் டக்கெனவே
"அபாய அறிவிப்பு" * சங்கிலியை இழுத்து
விட்டேன்! வண்டியும் நின்றுவிட்டது. இவர்
கள் வெளியேற எத்தனித்த சமயம் என்
னைப் பிடித்த நல்ல நேரத்தில் வந்துவிட்டார்
கள் ரயில்வே கார்ட்மார்கள்! இவர்களுக்கும்
வெளியேற முடியாமல் போய்விட்
டது! நான் விபரமாகவே விஷயத்தை மிஸ்
டர் கார்டிடம் கூறி அவளது கடிதத்தையும்
கொடுத்தேன்! பேஷ்! பலநாள் திருடர்கள்
இன்று அகப்பட்டு விட்டார்கள். ஆகையால்,
அடுத்த ஊர் ஸ்டேஷனிர்குச் சென்று போ
லீஸாரிடம் இவர்களை அனுமதித்து விடுவோ
மென்று, ரயில்வண்டிக்கு சிக்னல் கொடுத்
தார். ரயில் சற்று நேரத்திற்குள் அடுத்த
ஸ்டேஷன் வந்துநின்றதும், கார்டின் பாது
காவலில் ஸ்டேஷனிற்கு அழைத்துச் சென்
றதும், ஹலோ! நோட்வ்ன் ப்லீஸ் என்
ருர் டெலிபோனில். பின்னர், போலீஸார்
வந்ததும் இருவர்களையும் போலீஸாரிடத்தில்
அனுமதிக்கப்பட்டனர்கள். அடுத்த நாள்
"தினசரியில்" அவர்களிருவருக்கும் தலா 6
வரு-த் தண்டனை அடைந்ததுப்பற்றி அனு
தாபப்படாமல் என்ன செய்வது?

(கற்பனைக் கதை!)

(முற்றிற்று).

550 **"நபிபெருமானின் வீர மொழி"**

(முத்துப்பேட்டை கா. சே. முஹம்மது தாவூது)

அஞ்ஞான அர்தகாரத்தில் மூழ்கிக் கிடந்த மாக்களை மக்களாகத் திருத்தும்பொருட்டு அல்லாஹுத்தாலா தனது சொந்த கருணையால் நபி பெருமான் (ஸல்) அவர்களை அனுப்பி வைத்தான். நபிபெருமான் (ஸல்) அவர்கள் அல்லாஹுத்தாலாவால் அருளப்பட்டுவந்த வேத வசனங்களால் பொது ஜனங்களுக்கு உபதேசம் புரிந்து வந்தார்கள். வேதத்தின் உண்மை கருத்துக்களையும், நபி பெருமான் (ஸல்) அவர்களின் சற்குணங்களையும், சீரிய ஒழுக்கங்களையும் கண்டமக்காவாசிகளில் பலர், அல்லாஹுத்தாலாவின் கட்டளைக்கு தலைசாய்க்க வேண்டியது அவசியமென்பதைஉணர்ந்துஇஸ்லாத்தைதழுவினர்கள்.

நாளுக்கு நாள் இஸ்லாத்தின் எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டு போவதைக் கண்ட மற்ற மக்கா வாசிகளுக்கு நபிபெருமான் (ஸல்) அவர்கள்மீது சகிக்க முடியாத கோபமும், ஆத்திரமும் சுடர்விட்டெரிந்தது; பிறகு யாவரும் ஒன்றுகூடி நபிபெருமானின் சிறிய தந்தை அபூதாலியிடம் வந்து, "அபூதாலிபவர்களே! உமது தமயன் மகன் எங்கள் மதத்தைத் தூஷிக்கிறான்; நாங்கள் வணங்கும் கடவுளை அவமதிக்கிறான்; நாங்கள் உமது தாட்சண்யத்திற்காக ஒன்றும் சொல்லுவதில்லை, இவ்விதம் தூஷிப்பதை விட்டும் விலகிக் கொள்ளும்படி எச்சரியுங்கள், இல்லாவிட்டால் ரொம்பகெட்டவர்களாக உமது கண்முன் தென்படுவோம்" என்று சொன்னார்கள்.

அபூதாலிபவர்கள் நபிபெருமான் (ஸல்) அவர்களை அழைத்து மக்கா வாசிகள் தெரிவித்ததை சொல்லிக் காண்பித்தார்கள். அபூதாலிபவர்களின் வார்த்தைகளை செவிமடுத்துக் கேட்ட நபிபெருமான் (ஸல்) அவர்கள் அபூதாலிபவர்களை நோக்கி, "எனது பிரிய சிறிய தந்தையே! விருப்பமிருந்தால் எனக்கு உதவி செய்யுங்கள், இல்லாவிட்டால் வேண்டாம். நான் எனது முக்கிய கடமையை ஒருபொழுதும் விடமாட்டேன். எந்த அல்லாஹுத்தாலா என்னைப் படைத்து நபியாக்கினானோ அவனது கட்டளைகளை தெரிவிப்பேன்; எந்த வஸ்துக்களையும் இவர்கள் அநாவசியமாக வணங்குகிறார்களோ அவைகளை நான் ஒருபொழுதும் நம்பமாட்டேன். விக்ரகத்துக்கு அறிவுமில்லை; உணர்வுமில்லை; பலமுமில்லை; துணிவுமில்லை; அது உங்களுடைய எந்த காரியத்திலும் உதவி செய்யமுடியாது; எந்த ஆபத்தினின்றும் உங்களை அது காப்பாற்ற முடியாது; உங்களுடைய வேண்டுதலை பூர்த்தி செய்ய அது எவ்விதச் சக்தியும் பெற்றில்லை; அதை கடவுள் என்று எண்ணுவதற்கும் எஜமானென நினைப்பதற்கும், துளிக்கூட பொருத்தமில்லை. நீங்கள் அல்லாஹுத்தாலா வால் படைக்கப் பெற்ற உயிருள்ள படைப்புக்கள், அது அல்லாஹுத்தாலாவால் படைக்கப்பெற்ற உயிரற்ற வஸ்து; அது உங்களது காங்களால் செய்யப்பட்ட சொரூபம். உங்களுக்கு அறிவு இருக்கிறது, நினைவு இருக்கிறது நடக்க முடியும், ஒருவர் மற்றொருவருக்கு உதவி செய்ய தைரியம் உண்டு. செவிகளால் கேட்கவும், வாயால் பேசவும் முடியும். அந்த விக்ரகம் இவைகளுக்கு முற்றிலும் தூரமானது. இவ்விதமிருக்கும் அந்த விக்ரகங்களை ஏன் பூஜிக்கிறீர்கள்? நீங்கள் எதை விரும்பினாலும் செய்யுங்கள், எனக்கு நம்பிக்கையுண்டு அல்லாஹுத்தாலாவின் எண்ணத்தைப் பூர்த்திச் செய்து கொண்டிருப்பதால் எந்தவித இடையூறும் ஏற்படாதென்று அவர்களுக்கு நான்உபதேசிட்பேன்" என்று சொன்னார்கள்.

நபிபெருமானின் வீர மொழிகளை செ... யால் கேட்ட அவர்களது சிறிய தந்தை அபூதாலிப் நபிபெருமான் (ஸல்) அவர்களை பார்த்து, "எனது பிரிய தமயனின் மைந்த... கொஞ்சமும் அஞ்சவேண்டாம், யாருக்(கும்) பயப்படவேண்டாம். உனது வேலை ... செய்து கொண்டிரு. உன்னை தடை செய்வ தற்கு யாரொருவராலும் முடியாது. (வே)... வசனத்தில் நீ உண்மையானவனாக இருக்கி றாய். சகலராலும் மேலான நம்பிக்கைக்கு உரியவனாய் இருக்கிறாய். அல்லாஹுத்தாலா வால் உனக்கு அருளப்பட்டுவரும் வேத(ம்) அகில உலகத்திலுள்ள சகல மதத்த வேத(ங்) களைக் காண மேலான பரிசுத்தமுள்ள வே(த) மாக இருக்கிறது" என்று சொன்னார்.

சிறிய தந்தை அபூதாலிப் செ...ன இ... மொழியைக் கேட்ட நபிபெரு...ன் (ஸல்) அவர்கள் அளவற்ற மகிழ்ச்சியோடு இறை... னுக்கு நன்றி செலுத்தியவர்களாய் மீண்டு(ம்) இஸ்லாமிய பிரசாரம் செய்யத் தொடங்கினார்கள்.

*Printed by K. Noorulla Sahib, at the Federal Press, 12, Appumaistry Street G.T. Madras. Edited and Published by Hafiz A. N. Md. Yusuf (Baqa*

